

கல்கி
Kalki 27.9.[illegible]
ரூ 1.20
ராண்டார் கை எழுதும்
வருவான்
ராஜகுமாரன்!
மர்மத் தொடர்
அடுத்த இதழில் ஆரம்பம்

# விண்வெளியில் ஒரு பயங்கரத் தீவு!

அலைகடலில் மிதந்து கொண்டிருக்கும் ஒரு பழைய சரக்குக் கப்பல் புயலில் சிக்கி ஒரு ஏகாந்தத் தீவில் கரை சேர்க்கப்படுவதாகக் கற்பனை செய்து கொள்ளுங்கள். அந்தத் தீவில் ஒரு பயங்கர — இதுவரை மனிதன் கண்டறியாத மிருகம் இருப்பதாகவும், சேதமடைந்த கப்பலிலிருந்து இறங்கிய ஏழு பேரும் அந்த அதிபயங்கரப் பிராணியிடம் சிக்கிக்கொள்வதாகவும் கற்பனைக் குதிரையைத் தட்டிவிடுங்கள்...

இதே கதைதான். ஆனால் ஒரு வித்தியாசம் கடலுக்குப் பதில் விண்வெளி; பழைய கப்பலுக்குப் பதில் சரக்கு ஏற்றிச் செல்லும் பழைய விண்கலம். தீவுக்குப் பதில் விண்வெளியில் எங்கோ ஒரு கிரகம்!

விண்கலம் பழுதடைந்து அந்தக் கிரகத்தில் இறங்க அங்குள்ள கற்பனைக்கெட்டாத பயங்கரத்திடம் ஏழுபேரும் சிக்க, ஆறுபேர் பலியாகிவிட, கடைசியாக ஏழாவது ஒரு பெண்மணி சாமர்த்தியமாகச் செயல்பட்டு பயங்கரத்தை அழித்து ஒழித்துத் தப்புகிறாள்!

இந்தக் கதைதான் திறந்த வாய் மூடாமல் பிரமிப்புடன் பார்க்கும்படி திரைப்படமாகியிருக்கிறது.

ஏலியன் (Alien) படத்தை எடுக்க 9 மிலியன் டாலர் செலவாகியது. இதில் விளம்பரச் செலவு 6 மிலியன் டாலர்!

ஏலியன் படத்துக்கான யோசனையை, பானன் என்கிற திரைக் கதாசிரியர் கொண்டு வந்தார். ஃபாக்ஸ் நிறுவனத்தின் உதவித்தலைவர் வீகன் கதையை நிராகரித்து விட்டார்.



பிற ஸ்டுடியோக்களும் இதனை மறுத்து விட்டன. பானன் அதனால் சலிப்படையவில்லை. தனது கதை வசனத்தை ஜன்னல் வழியாக ஃபாக்ஸின் கதை எழுத்தாளர் அலுவலகத்தில் போட்டுவிட்டார். அதனுடன் ''இதைப் படியுங்கள்'' என்று ஒரு குறிப்பையும் இணைத்திருந்தார். கதாசிரியர் வால்டர் அதைப் படித்துவிட்டு, அந்த வசனங்களை மாற்றி எழுதினார். தன்னிடம்வந்த இந்தக் கதையைப் படித்த வீகன், இப்போது ஏற்றுக்கொண்டார். படமாக்க முடிவு செய்தார்!

-டி. எம். ஆர்.





# மணியோசை



⌘ கடற்கரையில் பாரதி சிலைக்கு முன் ம.பொ.சி.யும் என். மகாலிங்கமும்.

⌘ பகீரதன் செய்தித்துறை அமைச்சர் திரு வீரப்பனைப் பேசுமாறு அழைக்கிறார்.

⌘ விழாவுக்கு ஏகமாகச் செலவு செய்த திரு என். மகாலிங்கமும் விழாவுக்கு அரங்கை இலவசமாக வழங்கிய திரு எம்.ஏ. முத்தையா செட்டியாரும்.

அமரர் கல்கி அவர்களால் தோற்றுவிக்கப்பட்டு இன்று பொள்ளாச்சி திரு நா. மகாலிங்கம் அவர்கள் தலைமையில் இயங்கி வரும் சென்னை பாரதியார் சங்கம், நெருங்கி வருகின்ற பாரதி நூற்றாண்டு கோலாகலத்துக்கு ஒரு முன்னோடியாக மணியோசை எழுப்பியது. செப்டம்பர் 9, 10, 11 தேதிகளில் பாரதி விழாவை மிகச் சிறப்பாக ராணி சீதை மன்றத்தில் கொண்டாடியது. சொற்பொழிவுகள், கலை நிகழ்ச்சிகள், கவி அரங்கு, இசை அரங்கு முதலிய எல்லாம் இடம்பெற்ற இந்த மூன்று நாள்விழாவில் அமைச்சர் மாண்புமிகு வீரப்பன், உயர்நீதி மன்ற நீதிபதி மாண்பமை செங்கோட்டு வேலன், சட்ட மன்ற மேலவைத் தலைவர் ம. பொ.சி. கி. சந்திரசேகரன், திரு குமரி அனந்தன், அவ்வை நடராஜன், தெ. ஞானசுந்தரம் திரு சுந்தர வடிவேலு, நா. பாண்டியன், சிலம்பொலி செல்லப்பன் முதலிய பலர் கலந்து கொண்டு அரிய சொற்பொழிவுகளாற்றினர். அமரர் கல்கி பிறந்த தினத்தில் தொடங்கி, மகா கவி பாரதி அமரத்வம் அடைந்த தினத்தில் விழா முடிவதில் உள்ள பொருத்தத்தை அமைச்சர் வீரப்பன் எடுத்துக் காட்டி மகிழ்ந்தார். குமரி அனந்தன் அவர்களின் பேச்சு உணர்ச்சிப் பிரவாகமாகப் பெருக்கெடுத்து அவையோரை மெய் சிலிர்க்க வைத்தது.

கலை நிகழ்ச்சிகளுக்கு திரு எஸ். வி. சகஸ்ரநாமம் பொறுப்பேற்றிருந்தார். செல்வி உமா தண்டாயுதபாணி குழுவினரின் பாரதி நாட்டிய அஞ்சலியும், சேவா ஸ்டேஜ் குழுவினரின் பாஞ்சாலி சபதமும் அரங்கேறின.

திரு பி.பி. ஸ்ரீனிவாஸ், திருமதி லலிதா பாரதி, திரு ராஜ்குமார், திருமதி லட்சுமி ராஜரத்தினம், கோ. சிவசிதம்பரம், முதலியவர்கள் பாரதி பாடல்களை இன்னிசையாக வழங்கினார்கள். பாரதியார் சங்கச்செயலாளர் பகீரதன் அனைத்து ஏற்பாடுகளையும் அருமையாகச் செய்திருந்தார்.

இலந்தை ராமசாமி, பொன்மணி வைரமுத்து. மயன், இளந்தேவன், மதிவண்ணன், வ. வே. சு. போன்ற பல இளம் கவிஞர்கள் அருமையான கவிதாஞ்சலிகள் செலுத்தினர். அடுத்த பக்கத்தில் பாரதி பரம்பரையின் பெருமைக்கு எடுத்துக்காட்டாக ஒரு கவிதை.

⌘ அரங்க அலங்காரமும் பாரதியார் பேத்தி லலிதா பாரதியும் கொள்ளுப்பேரன் ராஜ்குமாரும்.

# பாரிருக்கும் நாள்வரைக்கும்...

இளந்தேவன்—

மூலநட் சத்திரத்தில் முகிழ்ந்துவந்த
ஒரு மனிதன்
காலத்தத்துவத்தைக் கடந்துவிட்ட
சுடராளன்!
இன்றைக்கு,
காற்றுண்டு கொண்டிருக்கும் காசினியில்
எவ்விடத்தும்
நூற்றாண்டு விழாவுக்கு நூதனமாய்
ஏற்பாடு!
அன்றைக்குப்
பாடையிலே அவன்பயணம்! பயணத்தில்
கலந்துகொண்டோர்
பதினெட்டே பேரென்பார் பரலி.சு.
நெல்லையப்பர்!
கிருஷ்ணாம் பேட்டையிலே கிடத்திவைக்கப்
பட்டவனின்
பாதி உடம்புதான் நெருப்புக்குச்
சாப்பாடு!
பாதியை ஏற்கனவே பட்டினிக்குக்
கொடுத்துவிட்டான்!
கவிஞன் என்பவன்—
வாழ்கிற காலத்தில் செத்துப்
போனவன்!
செத்துப் போனபின் வாழ்ந்துகொண்
டிருப்பவன்!
ஆகவே பாரதி அமரனாயிருக்கிறான்!
சிலரை நினைத்துக்
கால காலமாகி விட்டது!
இவன் விஷயத்தில்—
காலம் காலமாகி விட்டது!
இவன்,
வெளிச்சக் கீற்றிலே தூரிகை எடுத்து
வெட்ட வெளியிலே சித்திரம் வரைந்தவன்!
நெருப்புக் குழம்பிலே எழுதுகோல் தோய்த்து
நிமிடப் பொழுதிலே காவியம் வரைந்தவன்!
இவன்,
வானுறக்கம் போக்குதற்கு வையகத்தில்
எழும்பரிதி!
தானுறங்கச் சென்றிடுமுன் தமிழுறக்கம்
போக்கியவன்!

○ ○ ○

பாவுலகை ஆளவந்த வேந்தன் — இவன்
பார்முழுதுக்கும்உரிய மாந்தன் — திகழ்
மூவுலகைப்பாடலுக்குமுற்றும்விலை பேசுகின்ற
வேந்தன் — சக்தி
காந்தன்!
கண்ணிரண்டும் தீப்பறக்கும் வேல்கள்!-பொய்
கண்டுவிட்டா லோநெருப்புக் கோள்கள்!
—எங்கள்
காவியத்து நாயகனைக் கண்டவுடன் ஆடும்
—எமன்
தோள்கள் — ஓடும்
கால்கள்!
கச்சணிந்த மாதருக்கும் அஞ்சான் — அவன்
கச்சணியா மாதருக்கும் அஞ்சான்!—உயிர்
துச்சமெனத் தான்மதித்துத் துன்பமதைத்
தூள்படுத்த
அஞ்சான் — வைர
நெஞ்சான்
அச்சமதைக் கொன்றுவிடப் பார்ப்பான்—
இவன்
ஆணவத்தைக் கொன்றுவிட்ட பார்ப்பான்
—மண்ணில்
இச்சகத்தில் பிச்சைபெறும் சனர்களைக் கண்டு
மனம்
வேர்ப்பான்—பின்பு
ஆர்ப்பான்!
வானகத்தை வையமுடன் இணைப்பான்—தேவ
வாழ்க்கையுடன் மானிடத்தைப் பிணைப்
பான்—அந்த
மோனமகள் வெண்ணிலவை முத்தமிடப்
பாட்டினிலே
அழைப்பான்—அமுதைக்
குழைப்பான்!
வெண்ணிலவின் நல்லமுதைக் குடிப்பான்
—அந்த
விண்முகட்டில் ஓட்டைவிழ இடிப்பான்—எழிற்
கண்ணனவன் தன்னையிவன் காதலியாய்க்
கண்டு மனம்
துடிப்பான் — பா
வடிப்பான்!
காற்று வெளிப் பந்தலிலே நடப்பான்—வானக்
காட்டினிலே மின்மினியைப் பிடிப்பான்
கால
ஆற்றிலெதிர் நீந்துகின்ற ஆசைகளி லே
கவிதை
வடிப்பான்-தேன்
குடிப்பான்
பாரிருக்கும் நாள்வரைக்கும் இருப்பான்
—இவன்
பைந்தமிழின் பாடல்களில் இருப்பான்
—வானக்
காரிருக்கும் நாள்வரைக்கும் கற்பனையின்
அற்புதத்தில்
சிரிப்பான் — புகழ்
விரிப்பான்!





⌘ சேஷாத்திரி



⌘ கரையாளர்

● விம்பிள்டன் சாம்பியன் மாக்கன்ரோவுக்குத் தண்ணி காட்டியிருக்கிறார் ரமேஷ் கிருஷ்ணன். அமெரிக்க டென்னிஸ் சாம்பியன் போட்டியில் குவார்ட்டர் ஃபைனல்ஸ் வரை வந்த ரமேஷ், முதல் ஆட்டத்தில் மாக்கன் ரோவைத் தோற்கடித்தார். அதன் பிறகு தொடர்ந்து மூன்று ஆட்டங்களில் மாக்கன்ரோ வென்றபோதிலும், முதல் செட் தோல்வியும் இரண்டாவது செட் 6—7 வெற்றியும் அவரை உலுக்கி எடுத்து விட்டன. ''இந்த இருபது வயது ஆட்டக்காரர் நான் எதிர் பார்த்ததைவிட நன்றாகஆடுகிறார்; எச்சரிக்கையாக இல்லாமல் போய்விட்டேன்' என்றார் மாக்கன்ரோ. ''ரமேஷின் சர்வீஸைச் சந்திப்பது எனக்கு ரொம்பக் கஷ்டமாய் இருந்தது: இத்தனைக்கும் மனுஷன் மெதுவாக, மணிக்குச் சுமார் பத்து மைல் வேகத்தில்தான் ஸர்வ் பண்ணுகிறார். எனினும் 'எங்கே இதைத் தாக்கி ஆடு பார்க்கலாம்!' என்று சவால் விடுவது போலத்தான் வருகிறது பந்து!''

விம்பிள்டனில் விஜய் டென்னிஸ் ரசிகர்களைப் பரவசப்படுத்தினார் எனில் அதே விரத்தை நியூயார்க்கில் விகசிக்கச் செய்திருக்கிறார் ரமேஷ்.

-கு. கி.

● அண்ணா நகரில் சுலபமாகக் கண்டு பிடிக்கக் கூடிய ஒரு இடத்தில் உள்ளது வேலூர் நாராயணனின் விசாலமான வீடு. ஹாலில் அவர் மேயர் உடையில் காட்சியளிக்கும் படத்தைத் தவிர வேறு எந்தப் படமும் இல்லை. சோபாவில், குவியலாக மலர் மாலைகள்; வீட்டு வாசலில் வாரியத்தின் தலைவராக நியமிக்கப் பட்டிருப்பதால், பாராட்ட வந்தவர்கள் போட்டவை. கேள்விக்கு மட்டும் பதில் சொல்லிவிட்டு, சட்டென்று பேசுவதை நிறுத்திக் கொள்கிறார். 1969ல் சென்னை நகரில் குடிதண்ணீர் தட்டுப்பாடு ஏற்பட்டபோது 12 ஆயிரம் குழாய்களைப் போடுவதாக அன்று முதல்வராக இருந்த கருணாநிதி அறிவித்தார். அப்போது வேலூர் நாராயணன் மேயர். மாநகராட்சியினைக் கலந்தாலோசிக்காமல் அவர் குழாய்கள் போடுவதைப் பற்றி அறிவித்ததும் வேலூர் நாராயணன் கருணாநிதியிடம் கேட்க, அதற்கு அவர் திட்டத்தை வெளியிட்டுவிட்டு உங்களிடம் சொல்லலாம் என்றிருந்தேன் என்றாராம். 'சொன்னது 12 ஆயிரம் குழாய்கள். ஆனால் பொதுப் பணித் துறையினர் போட்டது 1000 குழாய்கள் கூட இருக்காது. அதிலிருந்து தான் எனக்கும் கலைஞருக்கும் மோதல் ஆரம்பம்' என்கிறார் நாராயணன். முடிந்த அளவுக்கு ஏழை, நடுத்தர மக்களுக்கு வீட்டு வசதிகளைச் செய்து தர முயற்சி எடுக்கப் போவதாகவும் சொன்னார்.



⌘ வேலூர் நாராயணன்

● சந்தடி மிக்க எல்லீஸ் தெருவில், ஒரு கட்டிடத்தில் இரண்டாவது மாடியில் வசிக்கிறார், மக்கள் கட்சியைச் சேர்ந்த தென்காசி தொகுதி எம்.எல்.ஏ. சட்டநாத கரையாளர். வயது 60. ரே கமிஷன் நியமனத்தை எதிர்த்து வழக்குத் தொடர்ந்து இடைக்காலத் தடை உத்தரவைப் பெற்றிருக்கும் இந்த முன்னாள் காங்கிரஸ்காரருக்காக வழக்காடியவர் பிரபல வழக்கறிஞர் சித்தாலே. ''ரே கமிஷன் விசாரிக்க இருந்த சில விஷயங்கள் ஒரு மாநிலத்தின் சுதந்திரத் தன்மையைப் பாதிக்கக் கூடிய வகையில் இருந்ததாலும், சட்ட சபையில் எதிர்க் கட்சித் தலைவர் பேசிய சில விஷயங்களைச் சபாநாயகர் நடவடிக்கை

⌘ ரமேஷ்



# சுற்றுலா

குறிப்புக்களிலிருந்து நீக்கிவிட்டதைப் பற்றி விசாரிக்க இருந்ததாலும்தான் நான் இந்த வழக்கைத் தொடர்ந்தேன். குறிப்பாக சட்டசபையில் நடந்தவற்றை விசாரிக்க எந்தக் கமிஷனுக்கும் அரசியல் சாசனப்படி உரிமை இல்லை'' என்று கூறும் கரையாளர் எரிசாராய விஷயத்தில் பல வருடங்களாக ஊழல் நடந்து வந்துள்ளது மட்டும் உண்மை என்று கூறுகிறார்.

ரே கமிஷனை எதிர்த்து வழக்குத் தொடர்வதற்கு முன், சரண் சிங், மதுலிமாயி, ஜார்ஜ் பெர்னாண்டஸ் ஆகியோரைக் கலந்தாலோசித்தாராம். சரண்சிங், கடிதம் கொடுத்ததனால்தான் பிரபல வழக்கறிஞர் சித்தாலே தமக்காக வாதாட வந்ததாகக் கூறும் கரையாளர், இரட்டை இலைச் சின்னத்தில் நின்று வெற்றி பெற்றவர். ''எம்.ஜி. ஆர். சொல்லித்தான் இந்த வழக்கைப் போட்டேன் என்று பேசிக் கொள்கிறார்கள். இது சத்தியமாக உண்மையே அல்ல'' என்கிறார் கரையாளர்.

—கௌசல்யா

● கிராமப்புற வளர்ச்சியில் அறிவியல்—பொறியியல் சாதனைகளை வெற்றிகரமாகச் செய்து காட்டியதற்காகச் சென்னை தரமணியில் இயங்கி வரும் ஏ.எம். எம். முருகப்ப செட்டியார் ஆராய்ச்சி நிலையத்தின் இயக்குநர் டாக்டர் வி.வி. சேஷாத்ரிக்கு இவ்வாண்டு 'ஜம்னாலால் பஜாஜ்பரிசு' கிடைத்திருக்கிறது.

கிராம மக்களின் தொழில் வளர்ச்சிக்காகச் சில கருவிகளை மிகவும் குறைந்த செலவில் மிக எளிய முறையில் அவர்களே தயார் செய்துகொள்ளும் முயற்சிக்கு வித்திட்டவர் டாக்டர் சேஷாத்ரி. காற்று விசையைப் பயன்படுத்தி நீர் இறைக்கும் சாதனம், சாண எரிவாயு அடுப்பு, சூரிய வெப்ப அடுப்பு, சூரிய வெப்ப உலர்த்தி, நவீன வகையில் மீன் உற்பத்திக்கான குட்டை எல்லாம் உருவாக்கியிருக்கிறார்.

மகாபலிபுரம் அருகே உள்ள நல்லான் பிள்ளை பெற்றாள் மடம், வடக்கடம்பாடி கிராம மக்கள் மேற்படி கண்டுபிடிப்புக்களை வெற்றிகரமாகப் பயன்படுத்த வழி வகுத்தவர் டாக்டர் சேஷாத்ரி.

ஐம்பத்தொரு வயதாகும் டாக்டர் சேஷாத்ரி சர் சி.பி. யின் பேரர். எண்ணற்ற ஆராய்ச்சி நூல்களுக்கும், கட்டுரைகளுக்கும் ஆசிரியர்.

—சாருகேசி; தமயந்தி

● சென்னை கோடம்பாக்கம் ரயில்நிலையத்தை அடுத்து ரயில்வே லயனை ஒட்டிய படிவரிசையாக சுமார் எழுபத்தைந்து குடிசைகள். ஒரு பெயர்ப் பலகை கண்ணில் படுகிறது: 'தீ விபத்து நிவர் நகர்' அங்கு வாழும் இளைஞரான மணி சொன்னார்: ''சில மாதங்களுக்கு முன்னால் தியாகராயநகர் பார்த்தசாரதிபுரத்தில் ஒரு தீவிபத்து ஏற்பட்டு நூறுக்கும் அதிகமான குடிசைகள் சாம்பலாயின அல்லவா? அப்போது எங்கள் குடிசைகளும் போய் விட்டன. வீடிழந்த நாங்கள் இங்கே வந்து குடிசை போட்டுக் கொண்டு விட்டோம்.''

—எல். சந்திரமௌலி

# கலைஞர் கைது

தமிழகத் தலைநகருக்கு மின்னல் வேக விஜயம் செய்து திரும்பினார் பிரதமர். ''மாநிலங்களின் வளர்ச்சியைப் பிரதமர் கணிப்பதாவது! அவருக்கென்ன உரிமை இருக்கிறது?'' என்று கேரள முதல்வர் நாயனார் கேட்டது அபத்தம் மட்டுமல்ல, அநாகரிகம்!

மாறாகத் தமிழக முதல்வர் பிரதமருக்கு நல்வரவேற்பு தந்து, மதிப்பும் மரியாதையும் காட்டி, தமிழகத்தின் வளர்ச்சியைச் சுட்டியதுடன் மேலும் முன்னேற மத்திய அரசிடமிருந்து எதிர்பார்க்கும் ஒத்துழைப்பையும் உதவியையும் விவரித்திருக்கிறார். கௌரவம் காத்தார்.

பிரதமரும், ''நான் இங்கே குற்றம் குறை காணவரவில்லை; மாநிலத்தின் வளர்ச்சிக்கு யோசனைகள் கூறவும், பிரச்னைகளை நேரடியாகப் புரிந்து கொள்ளவும், ஒத்துழைத்து உதவவும் வந்திருக்கிறேன்'' என்றார். கண்ணியம் காத்தார்.

மத்திய – மாநில நல்லுறவு வலுப்பட பிரதமரின் இது போன்ற விஜயங்கள் நிச்சயம் உதவும். அதுவும் மாற்றுக் கட்சி ஆளும் மாநிலத்தின் அபிவிருத்தியில் பிரதமர் அக்கறை காட்டி வருகை புரிவது மக்களிடையே நம்பிக்கையையும் ஜனநாயகப் பற்றையும் வளர்க்கும்.

இந்த இனிய கீதத்தினிடையே தூக்கி வாரிப் போடச் செய்வது போல் திடீரென்று ஒலித்தது ஒரு கர்ண கடூரமான அபசுவரம்! ''மாநிலம் தழுவிய முறையில் தமிழக முதல்வர் அறிவித்திருக்கும் ஹர்த்தால் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? இது வேலைநிறுத்தத் தடைச் சட்டத்துக்கு முரணானதல்லவா?'' என்று ஒரு நிருபர் கேட்டபோது, ''அல்ல'' என்று பளிச்சென்று பிரதமர் பதில் கூறி இருந்தால் எவ்வளவு நன்றாயிருந்திருக்கும்! ஆனால் அப்போதுதான் ஒலித்தது அபசுவரம்! நிருபரின் கருத்தைத் தாம் ஏற்பது போல் பேசி விட்டார் பிரதமர். மொட்டைத்தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போட்டார்!

எம்.ஜி.ஆர் அறிவித்த மாநிலம் தழுவிய ஹர்த்தாலானது வேலை நிறுத்தத்தைத் தூண்டி விடுகிற விஷயம் அல்ல; அல்லவே அல்ல. அண்டை நாடு ஒன்றில் நமது சகோதர சகோதரிகள் – தமிழர்கள் – படும் அவதிக்கு நாம் அனுதாபம் தெரிவித்து நடத்தியது அது. மேலும், 'ஈழத் தமிழரின் உயிருக்கும் உடைமைக்கும் பூரணப் பாதுகாப்பு வேண்டும்; அவர்களுக்கு அநீதியும் கொடுமையும் இழைக்கப்படக் கூடாது; சிங்களவருடன் தமிழருக்கும் சம உரிமைகள் வழங்கப்பட வேண்டும்; ஈழத் தமிழரும் சிங்களவரும் ஒற்றுமையாய் வாழ வேண்டும்' என்கின்ற நமது விருப்பத்தை இலங்கை அரசுக்கும் மக்களுக்கும் வன்மையாக உணர்த்தியது ஹர்த்தால். இது எப்படி வேலைநிறுத்தத்தைத் தூண்டி விடுவதாகும்? பார்க்கப் போனால் லட்சக்கணக்கான சிறு வியாபாரிகள், தொழிலாளிகள் முதல், மிகப்பெரிய வர்த்தகர்கள், தொழிலதிபர்கள் வரை எல்லோரும் தங்களுக்கு ஏற்படக் கூடிய ஒரு நாள் நஷ்டத்தைச் சிறிதும் பொருட்படுத்தாமல் பூரண ஒத்துழைப்புத் தந்தனர். அதன் மூலம் இந்தப் பிரச்னையில் தாங்கள் அனைவரும் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டிருப்பதைக் காட்டிக்கொண்டனர். தமிழகம் தானாகவே முன்வந்து கோடிக்கணக்கான ரூபாயைத் தியாகம் செய்தது. ஹர்த்தால் ஒரு சிறு கலவரமும் இன்றி முழு வெற்றி பெற்றதானது முதல்வருக்கும் தமிழகத்துக்கும் பெருமை சேர்த்தது. ஒரே ஒரு குறை: காந்திஜி காட்டிய மார்க்கத்தில் உபவாசமும் பிரார்த்தனையும் ஹர்த்தாலுடன் இணைந்திருந்தால் ஆன்மசக்தி அமோகமாய்ப் பெருகியிருக்கும்.

ஹர்த்தாலின் மாபெரும் வெற்றி கலைஞரின் கண்களை உறுத்தியிருக்கிறது. படை திரட்டிப் புறப்பட்டுவிட்டார், தடை உத்தரவை மீறி! ஈழத் தமிழர் விஷயத்தில் மாநில அரசு தலையிட்டு ஏதும் செய்ய முடியாது என்பது எல்லோரும் அறிந்த ஒன்று. மத்திய அரசு கூட நேரடியாக அண்டை தேசத்தின் உள்நாட்டுப் பிரச்னையில் தலையிட முடியாது என்றாலும் தனது செல்வாக்கைத் தூதரகம் மூல


1981 செப்டம்பர் 27

துன்மதி புரட்டாசி 11

மலர்: 40 இதழ்: 9





கல்கி




தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

மாகவும் அயல் விவகார அமைச்சரவை மூலமாகவும் ஓரளவுக்கேனும் பிரயோகிக்க முடியும். ஆழ்ந்த கவலை தெரிவிக்க முடியும்.

(நிலைமை கட்டுக்கடங்காது போகுமானால் — அந்தச் சூழ்நிலை ஏற்படவே வேண்டாம் — எச்சரிக்கை கூட விடுக்கலாம்.)

அனைத்துத் தமிழரின் அமைதியான ஹர்த்தால் மத்திய அரசின் முயற்சிகளுக்குப் பக்கபலமாக இருக்கும். ஆனால் சென்னையில் ஈழத் தூதரகம் முன் கலைஞரின் ஆர்ப்பாட்டம் மத்திய அரசின் முயற்சிகளுக்கு இடையூறாகவே இருக்கும். சிங்களவருக்குத் தமிழர் மீது வெறுப்பும் வன்மமும் வளரவே துணை செய்யும்.

பிரதமருடனும் அவரது கட்சியுடனும் கூட்டுச் சேர்ந்துள்ள கலைஞர், மத்திய அரசு மட்டுமே கவனிக்கக் கூடிய பிரச்னையான இதில், மத்திய அரசு இன்னும் தீவிர ஈடுபாடு காட்டவேண்டும் என்று டில்லிக்குப் போய் வாதாடலாமே! இதற்கு அவர்கள் செவி சாய்க்கவில்லையெனில் பிரதமர் இல்லம் முன்பாக ஆர்ப்பாட்டம் நடத்தலாமே? இங்கே இலங்கைத் தூதரகத்தின் முன் ஆர்ப்பாட்டம் செய்து எரிகிற தீயில் எண்ணெய் ஊற்றுவானேன்?

காரணம் அனைவரும் அறிந்ததே: எம்.ஜி. ஆருக்குத் தொல்லை தருவது ஒன்றே கலைஞரின் நோக்கம். இலங்கைத் தூதரகத்துக்குப் பாதுகாப்பு தரவேண்டிய பொறுப்பில் உள்ள எம்.ஜி.ஆர்., தடை உத்தரவு பிறப்பித்தே தீருவார்; திமுக தொண்டர்கள் கைதாவார்கள்; பிறகு தாமும் கைதாகலாம்; கழகக் கண்மணிகள் கல்லெறிவார்கள்; பொதுச் சொத்துக்களுக்குச் சேதம் விளைவிப்பார்கள்; இங்கே எப்படியாவது சட்ட ஒழுங்குச் சீர்குலைவைத் தோற்றுவித்து, இந்த அமைச்சரவையைப் பதவி இறக்கம் செய்து விடலாம்!

ஈழத் தமிழர்களின் நலனைவிட அதிகமாகக் கருணாநிதியின் சிந்தனையில் இருப்பது 'எம். ஜி. ஆரை எப்படி கவிழ்ப்பது?' என்பதுதான். தெரிந்தேதான் செய்கிறார் கலைஞர். அவரைப் புரிந்து கொண்டிருக்கிறார் தமிழர்!

---

# ஒரு  பிடி  அவல்!

● கணிதப் பேராசிரியர் ஒருவர் வீட்டுச் சுவரில் காணப்பட்ட வாசகம்:
- Add joy, Subtract sorrow, multiply friends, divide enemies.

● அண்மையில் வெளிப்புறப் படப்பிடிப்பில் கலந்துகொண்டு ரயில் மூலம் சென்னை எழும்பூர் இரயில் நிலையத்தில் ஜெய்சங்கரும், தேங்காயும் வந்து இறங்கினர். ஆனால் அவர்கள் வருகையை ரயில் நிலையத்திலிருந்த எவரும் கண்டுகொள்ளாதது பார்க்க வியப்பாக இருந்தது.

● Presense of mind என்பதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு ஒன்றைக் காவல் துறை ஆய்வாளர் ஒருவர் கூறினார்.

ஒரு வீட்டில் மாமியார் நடு ஹாலில் அமர்ந்திருக்க — மருமகள் சமையலறையில் தோசை வார்த்துக் கொண்டிருந்தாராம். எப்படியோ ஏற்கனவே வீட்டுக்குள் புகுந்திருந்த திருடன் திடீரென்று மாமியாரிடம் கத்தியைக் காட்டி நகைகளைக் கழற்றத் தொடங்கியதைக் கண்ட மருமகள் ஓசைப்படாமல் தன் நகைகள் அனைத்தையும் கழற்றித் தோசை மாவுக்குள் போட்டுவிட்டாராம். அதனால் மருமகளின் நகைகள் அனைத்தும் தப்பின.

● ஆவடி அருகே ஒரு சாராயக் கடையில் 'குடி குடியைக் கெடுக்கும்' எனக் கொட்டை எழுத்துக்களில் எழுதி வைத்துள்ளனர்.

● 'ராகிங்' ஒழிக்கப்பட வேண்டும் என்று எல்லோரும் கூறிக் கொண்டு வருகின்றனர். ஆனால் இதே வேளையில் புதிதாகச் சேரும் மாணவர்களை மனமுவந்து வரவேற்கும் பழைய மாணவர்களும் இருக்கத்தான் செய்கின்றனர். அம்பத்தூரில் உள்ள ஒரு தொழிற் பயிற்சிப் பள்ளியில் ''புதிய பறவைகளே வருக'' என்ற அறிவிப்புப் பலகை காணப்படுகிறது.

● மின்வண்டியில் டிக்கட் இல்லாமல் பயணம் செய்பவர்கள் அகப்பட்டுக் கொண்டால் தற்போது நீதி மன்றத்துக்கு அழைத்துச் செல்கிறார்களோ இல்லையோ, ரயில்வே காவல் துறையினர் டிக்கட் இல்லாதவர்களைச் செம்மையாக உதைத்து விடுகின்றனர்.

-பெம்ஜி



கள்ளச் சாராயத்தைக் குடித்துவிட்டு மக்கள் சாவதைவிட, நல்ல சாராயத்தைக் குடித்துவிட்டு மக்கள் வாழட்டும் என்ற ''நல்ல நோக்கத்தில்''தான் எம்.ஜி.ஆர். சாராயக் கடைகளைத் திறந்தார். ஆனால் நடப்பது என்ன? கள்ளச் சாராயத்தை விட ஒன்றரை மடங்கு நல்ல சாராயத்தின் விலை அதிகமாக இருப்பதால், மக்கள், கள்ளச் சாராயத்தையே இன்னும் நாடுகிறார்கள். கவனியுங்கள், ஒரு சின்னக் கணக்கு:

தமிழ்நாட்டில் தினமும் 6 லட்சம் லிட்டர் சாராயம் விற்பனை ஆவதாக மந்திரி எஸ்.டி. எஸ், சட்டமன்றத்திலேயே கூறியிருக்கிறார். ஆக மாதம் 180 லட்சம் லிட்டர் சாராயம் தமிழ்நாட்டில் விற்பனையாகிறது. சர்க்கரை தயாரித்தது போக மீதியுள்ள கழிவுப் பொருளான ''மொலாஸஸ்'' எனப்படும் பொருளிலிருந்து தயாரிக்கப்படுவதும் தற்போது மிகவும் புகழ் பெற்றதுமான ''எரி சாராயம்'' ஒரு லிட்டர் இரண்டரை ரூபாய் தான். சாராயக் கலவை தொழிற்சாலைகள் சர்க்கரை ஆலைகளிலிருந்து ஒரு லிட்டர் இரண்டரை ரூபாய் என்று எரி சாராயத்தை வாங்குகின்றன. இந்த ஒரு லிட்டருடன் 1.5 லிட்டர் சுத்தமான தண்ணீரைக் கலந்தால் இரண்டரை லிட்டர் தயாராகிறது. ஆக ஒரு லிட்டர் சாராயத்தின் விலை ஒரு ரூபாய்தான். சுத்தமான தண்ணீருக்கு அதிக பட்சமாக விலை ஒரு ரூபாய் என்றே வைத்துக் கொள்ளுங்கள். கலால் வரி, மற்றும் பல செலவுகளையும் சேர்த்து ஒரு லிட்டர் சாராயத்தின் விலை அதிகபட்சமாக 6 ரூபாய்க்குத் தான் விற்கப்பட வேண்டும். ஆனால் இந்தச் சாராயக் கலவைத் தொழிற்சாலைகள்மொத்த விற்பனையாளருக்கு ஒரு லிட்டர் 11 ரூபாய் என்று விற்கிறது. பாட்டில்களிலும் அடைத்துக் கொடுக்கவேண்டும் என்ற நிபந்தனையுடன் தான் கலவைத் தொழிற்சாலைகளுக்கு லைசென்ஸ் வழங்கப்பட்டது. ஆனால் இந்தக் கலவைத் தொழிற் சாலைகளில் அதற்குண்டான வசதிகளை இதுவரைசெய்யவில்லை. சாராயத்தை பிளாஸ்டிக் 'கேன்'களில் அடைத்து அனுப்பிக் கொண்டிருக்கிறார்கள். இந்தக் கலவைத் தொழிற்சாலைகள் அமைந்ததற்கு ஏற்பட்ட செலவு மிகக் குறைவுதான். எரி சாராயம் தவிர தேவையான மூலப் பொருள், சுத்தமான தண்ணீர், சாராயத்தைத் தண்ணீருடன் கலக்கப் பெரிய பெரிய தொட்டிகள் இவ்வளவே.

ஆக தமிழ் நாட்டில் உள்ள 10 சாராய கலவைத் தொழிற்சாலைகள் மாதம் செலவாகும் 180 லட்சம் லிட்டர் சாராயத்தை ஒரு லிட்டர் 11 ரூபாய் என்று 19.80 கோடி ரூபாய்க்கு மொத்த வியாபாரிகளுக்கு விற்பனை செய்கிறது. ஆனால் 180 லட்சம் லிட்டர் சாராயத்தின் விலை 1.8 கோடிதான். ஒரு லிட்டருக்கு இரண்டு முதல் ஆறு ரூபாய் வரை கலால் வரி என்று வைத்துக்கொண்டால் கூட மொத்த அளவான 180 லட்சம் லிட்டருக்கு 8 முதல் 10 கோடிக்கு மேல் போக முடியாது. ஆக 1.8 கோடி ரூபாய் சரக்கை 19.80 கோடி ரூபாய்க்கு விற்று அதில் கலால் வரி, மற்ற செலவுகள் போக மாதத்துக்கு எட்டு முதல் 10 கோடிவரை சம்பாதிக்கின்றன இந்தச் சாராயக் கலவைத் தொழிற்சாலைகள். இந்த அளவு கொள்ளை அடிக்கும் இந்தத் தொழிற்சாலைகள் இதுவரை பாட்டில்களில் அடைத்து

# ஒரு 'தலை சுற்றும்' விவகாரம்!














விநியோகம் செய்யவில்லை. சரி, மீண்டும் கணக்குக்கு வருவோம்.

ஒரு லிட்டர் 11 ரூபாய் என்று வாங்கும் மொத்த வியாபாரி அதைச் சில்லறை வியாபாரிகளுக்கு ஒரு லிட்டர் 20 ரூபாய்க்கு விற்கிறார். மொத்த வியாபாரிகளுக்கு ஆகும் செலவு, கலவைத் தொழிற்சாலைகளிலிருந்து கிடங்குக்குச் சாராயத்தைக்கொண்டு வருவதற்கான போக்குவரத்துச்செலவுதான். கடையில் அதைக் குடிப்பவர்கள் வாங்கும் போது ரூ. 25 ஆக விலை உயர்ந்துவிடுகிறது. நினைத்துப் பாருங்கள். ஒரு லிட்டர் சாராயத்தின் அடக்க விலை ஒரு ரூபாய்தான். சில்லறை விற்பனையாளர்கள் விற்பது 25 ரூபாய். இடையில் ஏன் இந்த வித்தியாசம்? எல்லாம் கலவைத் தொழிற்சாலைகளும், மொத்த வியாபாரிகளும், கலால் வரி என்ற பெயரில் அரசாங்கமும் சேர்ந்து அடிக்கும் கொள்ளையே!'

சாராயக்கடை ஏலம்எடுத்தவர்கள் லட்சம் லட்சமாகப் பணத்தைக் கொட்டி எடுத்திருக்கிறார்கள். இவ்வளவு அதிகமாக விலை இருப்பதால் மக்கள் விலை குறைவாகக் கிடைக்கும் கள்ளச் சாராயத்தையே நாடிச் செல்கிறார்கள். இதனால் பல கடைகளில் கூட்டம் இல்லை. ஒரு சில்லறை வியாபாரி வருத்தத்துடன் சொன்னார்: ''இந்தக் கள்ளச் சாராய வியாபாரத்தைப் போலீஸ் ஒழிக்கவில்லையென்றால் நாங்கள் லைசென்ஸை ஒப்படைத்துவிட்டுத் தலையில் துண்டைப் போட்டுக் கொண்டு கடையைக் கட்ட வேண்டியதுதான்.''

சாராயக் கடைகளை ஒரு சுற்று சுற்றிப் பார்த்ததில் பல சாராயக் கடைகளில் அரசாங்கச் சரக்குடன், கள்ளச் சாராயமும் சேர்ந்து விற்கப்படுவதைக் காண முடிந்தது. இது பற்றி ஒரு கடைக்காரரிடம் கேட்டதில், 'இல்லாட்டி கட்டுபடி ஆகாது ஸார்' என்று கூறினார்.

இதே நிலை நீடித்தால் பெங்களூரில் நிகழ்ந்தது போல் இங்கும் கள்ளச் சாராயச் சாவுகள் நிகழ்ந்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை.

—ப்ரியன்

# பிலிம் இல்லாத காமிரா!

வீடியோ காமிரா, காஸெட் டேப், வீடியோ டெக் ஆகியன கண்டு பிடிக்கப்பட்ட பிறகு அடுத்த கட்டம் பிலிம் இல்லாத ஸ்டில் ஃபோட்டோ காமிரா என எதிர்பார்க்கப்பட்டது. எதிர்பார்ப்பை முதன்முதலில் பூர்த்தி செய்திருப்பவர்கள் ஜப்பானிய ஸோனி நிறுவனத்தினர். 1983ல் பெருவாரியாக உற்பத்தியாகி விற்பனைக்கு வரும் என்று எதிர்பார்க்கப்படுகிற இந்தக் காமிராவில் வீடியோ டேப்பிற்குப் பதில் சதுர வடிவில் ஒரு காஸெட் டிஸ்க் இருக்கும். படம் எடுத்தானதும் வீடியோ டெக்குக்குப் பதில் ஒரு அடாப்டர் சாதனத்தில் டிஸ்கைப் பொருத்தி அதனை டி. வி. யுடன் இணைத்தால், திரையில் படம் பளிச்சென்று தெரியும். யாருக்காவது அனுப்பவோ, பத்திரிகைகளுக்குத் தரவோ, புகைப்படமாகவே தேவை எனில் தனியே பிரிண்டர் சாதனம் ஒன்றிருக்கிறது. இதனை அடாப்டருடன் இணைக்க வேண்டியதுதான். வண்ணப்படம் கிடைத்து விடும்! பெரிய வசதி என்னவெனில், காமிராவில் பொருத்தப்படும் காஸெட் டிஸ்க்கில் 50 படங்கள் வரை எடுக்கலாம் என்பதுடன் காஸெட்டைத் திரும்பத் திரும்பப் பயன்படுத்தவும் செய்யலாம்!

- நன்றி: நியூஸ்வீக்



# பொன்மனச் செம்மலும் பொன்விழா ஆண்டும்

வித்துவான் வே. லட்சுமணன்



✖ இதயவீணையில் மஞ்சுளாவுடன்

## 7

"கல்யாணம் பண்ணிப் பார்" என்று சொல்வது போல,

"வீடு கட்டிப் பார்" என்று சொல்வது போல,

"படம் எடுத்துப் பார்" என்றும் சொல்லலாம்.

மூன்றும் ஒரு வகையில் ஓர் இனம்.

கணக்கு, கணிப்பு, ஓர் எல்லைக் கோடு ஆகியவற்றைக் கடந்து, எங்கேயோ நெடுந் தொலைவுக்கு இழுத்துச் செல்லப்படுகிற ஓர் அனுபவம் மேற்சொன்ன மூன்றிலுமே சரிநிகராக ஏற்படுவது இயற்கை.

செலவுக்கு முற்றுப்புள்ளி போடுவதற்குள் மூச்சுத் திணறிவிடும்.

இழைத்து ஜோடித்துச் சிறப்பாக அமைக்க வேண்டும் என்கிற ஆர்வமும் ஆசைத் தூண்டு தலும் ஓர் அளவுக்குள் அடங்குவதில்லை.

இந்தப் பணிகளைத் தொடங்குபவர் அல்லது கர்த்தா யாரோ, அவர் பலரை ஒன்று சேர்த்துப் பலரின் கூட்டுறவால் செய்யக் கூடிய அவசியம் இவற்றில் உண்டு.

பணம், திறமை, முந்தைய அனுபவம் ஆகிய மூன்றுக்கும் முக்கியத்துவம் கொடுக் கப்பட வேண்டிய துறைகள் இவை.

சினிமா தொழிலில் லட்சக் கணக்கான தொகை, பலருடைய உழைப்பு, எல்லாம் 'பிலிம் சுருள்' என்கிற ரூபத்தில் சுருண்டிருக் கும்.

இந்த 'பிலிம் சுருள்' முழுமைப் பொலி வடைந்து, எல்லா வகையிலும் முற்றுப் பெற்று வெள்ளித் திரைக்கு வரும்வரை அதன் மதிப்பு பல லட்சங்கள் என்று வாயள வில் தான் சொல்லமுடியும்! உடனடியாகப் பணமாக மாறுகிற ஆற்றலோ தகுதியோ அதற்கு இராது!

இப்படிப்பட்ட துறையில் எண்ணற்ற சாதனைகளைச் செய்த மக்கள் திலகம் அவர்கள் 'மாட்டுக் கார வேலன்' படத் துக்குப் பிறகு நடித்த படங்களில் மிகவும் பாராட்டுப் பெற்ற படம் சத்யா மூவிஸா ரின் 'ரிக்ஷாக்காரன்'.

இப் படத் தயாரிப்பாளரான ஆர். எம். வீரப்பன் அவர்கள் மக்கள் திலகம் அவர்களை எந்தெந்தக் கோணங்களில் மக்களுக்கு வழங்க வேண்டும் என்பதை நன்றாக உணர்ந்தவர்; இது அவருக்குரிய தனியாற்றல்.

எடுத்த பணியை முடிக்கும்வரை மக்கள் திலகம் அவர்கள் எப்படி ஒரு கர்ம யோகி யாக உழைப்பது வழக்கமோ அப்படியே திரு ஆர். எம். வீ. அயராது பாடுபடுவதை நேர்முகமாகப் பார்த்திருக்கிறேன்.

வெற்றி என்பது ஒருசிலருக்கு வேண்டு மானால் அதிர்ஷ்டவசமாக ஏற்படக்கூடுமே தவிர, நான் அறிந்தவரையில் மக்கள் திலகம் அவர்களுக்கோ, திரு ஆர். எம். வீ. அவர் களுக்கோ ஏற்பட்ட வெற்றிகள் எல்லா வற்றுக்கும் அடிப்படையில் ஏராளமான சோதனைகள், சங்கடங்கள், அவற்றை மீறிய உழைப்பு, தியாகம் ஆகியவை முக்கியத் துவம் பெற்றிருந்தன என்பது உண்மை.

'ரிக்ஷாக்காரன்' படத்தை ஒரு வெற்றிப் படமாக்கி மக்களுக்கு அதை ஒரு பரிசாக



வழங்க வேண்டும் என்கிற நோக்கம் காரண மாகப் பொன்மனச் செம்மல் நிறைய நாட்கள் படத்தில் நடித்து முடித்தார். படத்தில் இழைப்பு வேலைகள் அதிகம். கலையம்சங்கள் ஏராளம். பாடல் காட்சிகள், களங்கள் ஆகியவை பிரும்மாண்டமானவை. தயாரிப்பாளர் சிறிதளவும் தளராமல் மனம் கலங்காமல் தைரியத்தோடு படத்தை உரு வாக்கினர்.

கதை, உரையாடல் என்கிற அம்சங் களிலும் சிறப்புக்கள் சேர்க்கப்பட்ட படம், இது. 'டெக்னிகலாகவும்' பல உத்திகள் கையாளப்பட்டன.

இயக்குனர் திரு கிருஷ்ணன், வசனகர்த்தா திரு ஆர். கே. ஷண்முகம், மற்றும் 'டெக் னிஷியன்' என்கிற வகையில் எல்லாருமே தயாரிப்பாளரோடும், மக்கள் திலகம் அவர் களோடும் ஒன்று சேர்ந்து பேசிக் கருத்துக் களைப் பரிமாறிக் கொண்டு, தெளிவான

முறையில் பட ஆக்கத்துக்குத் தங்கள் பணியைச் செய்தார்கள்.

'இதற்கு இவ்வளவு அதிகச் செலவாகும்' என்று சொன்னால் அதற்குப் பின்வாங்க மாட்டார் ஆர். எம். வீ. அவர்கள். செலவு செய்வதன் மூலம் சிறந்த விளைவு ஏற்படுவதே அவரது மூல நோக்கமாக இருக்கும்.

படம் வெளி வந்தது.

வசூலில் புதிய சாதனை செய்தது. சமுதாய மறுமலர்ச்சிக் கண்ணோட்டத்தில் ஒரு முத்திரையைப் பொறித்தது.

இவை எல்லாவற்றுக்கும் மேலாக மக்கள் திலகம் அவர்களுக்கு இந்திய அரசின் 'பாரத்' பட்டத்தைப் பெற்றுத் தந்தது. 'இந்தியச் சிறந்த நடிகர்' என்கிற உன்னத விருது அது.

இதற்கான விழா கல்கத்தாவில் நடைபெற்றது. அந்த அரசாங்க விழாவில் கலந்துகொண்டு ஆனந்தமடைந்தவர்களில் நானும் ஒருவன்.

விருது பெற்று வெற்றித் திலகமாகத் தமிழகம் திரும்பிய மக்கள் திலகத்தை சென்னை மீனம்பாக்கம் விமான நிலையத்தில் வரவேற்கக் கூடியிருந்த கூட்டம் வரலாற்றுச் சிறப்புடைய ஒன்று.

அன்றைய தமிழக முதல்வரிலிருந்து எல்லா அமைச்சர்களும் அங்கு கூடி திரு எம். ஜி. ஆர். அவர்களுக்கு மாலை சூட்டி வரவேற்றார்கள். தாய்மார்களின் வாழ்த்து மாலைகள் குவிந்தன. கடல் போல் திரண்ட மக்களின் வாழ்த்தொலிகள் விண்ணதிரச் செய்தன.

அன்று தமிழக முதல்வராக விளங்கிய திரு கருணாநிதி அவர்கள் அரச விருது பெற்ற மக்கள் திலகம் அவர்களைப் போற்றி, ஆனந்த விகடனில் எழுதினார்கள்:

> ''எனதருமை உடன் பிறப்பனையார் எம். ஜி. ஆர். அவர்கள் இந்தப் பெருமைக்கு முற்றிலும் தகுதியானவர். தமிழகக் கலைத் துறையின் ஒளிமிகுந்த கதிராக அவர் விளங்கி வருகிறார். அவரது உருவம் பிஞ்சுக் குழந்தைகள் முதல் பிராயம் முற்றிய பழுப்புக்கள் வரையில் அவர் தம் இதயத்தில் நிறைந்த உருவமாகும்.

---

அப்பா : ''பிராக்ரஸ் ரிப்போர்ட்டுடன் என்னவோ காகிதத்தை நீட்டறியே... என்னடா அது?''

மகன் : ''என்னை அடிக்கக் கூடாதுனு அம்மா கொடுத்த சிபாரிசுக்கடிதம்!''

— உ. ராஜாஜி



---

''அவர் நடிப்பில் தென்றலின் சுகத்தையும், அவர் ஈடுபடும் சண்டைக் காட்சிகளில் மின்வெட்டுக்களின் உயிர்ப்பையும் உணரலாம்...

''புரட்சி நடிகராக, பொன்மனச் செம்மலாக, எங்கள் கழகப் பொருளாளராக, அண்ணாவின் தம்பியாக, என் சகோதரராகத் திகழும் எம். ஜி. ஆர். அவர்களுக்கு வழங்கப்படுகிற இந்தச் சிறப்பு, தாயகத்து மக்கள் அனைவருக்கும் பூரிப்புத் தரும் ஒரு நற்செய்தியாகும். கலை ஆர்வம், கழக ஆர்வம், மக்களின் நலனில் குன்றாத ஆர்வம் கொண்ட அவரைப் பாராட்டிச் சிறப்பித்துள்ள தேர்வுக் குழுவினரை நான் பாராட்டுகிறேன்.

''மடியில் விழுந்தது ஒரு கனி: அதனை எடுத்து இதயத்தில் வைத்துக்கொண்டேன் என்று அண்ணா அவர்கள் எம். ஜி. ஆர். பற்றிக் குறிப்பிட்டதை இப்போது எண்ணி மகிழ்கிறேன். இது போல் இன்னும் பல சிறப்புக்களுக்கும் பொருத்தமான புரட்சி நடிகர், 'பல்லாண்டு வாழ்ந்திடுக' என வாழ்த்துகிறேன்.''

—அன்று கலைஞர் அவர்களால் அளிக்கப்பட்ட இந்த வாழ்த்து மொழிகளை, இன்று இன்றைய சூழ்நிலையில் நினைவு கொள்ளும் போது, ஒருவிதமான உணர்வும் அனுபவமும் உலகியல் பற்றிய சிந்தனையும் ஏற்படும்.

''ரிக்ஷாக்காரன்'' படத்துக்குப் பிறகு, அடுத்து மகத்தான படைப்பாக வெளிவந்து, மாபெரும் வெற்றி பெற்ற படம் ''உலகம் சுற்றும் வாலிபன்''.

இடையில் 'நீரும் நெருப்பும்', 'ஒரு தாய் மக்கள்', 'அன்னமிட்ட கை', 'இதய வீணை' 'நல்ல நேரம்', 'நான் ஏன் பிறந்தேன்' 'ராமன் தேடிய சீதை', 'சங்கே முழங்கு' முதலானவை.

ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு சிறப்பு இருக்கவே செய்தது. குறிப்பாக இவற்றில் 'இதய வீணை' பற்றிச் சொல்ல வேண்டிய ஒரு தகவல் உண்டு.

உதயம் புரொடக்ஷன்ஸ் தயாரிப்பான இப்படத்தின் ஆரம்ப விழாவில் தலைமை வகித்துப் பாராட்டியவர் திரு கருணாநிதி அவர்கள். அப்போது திரு எம். ஜி. ஆர். அவர்கள் கழகப் பொறுப்பாளர், கலைஞர் அவர்கள் கழகத் தலைவர்.

'இதய வீணை'யை ஆரம்பித்து வாழ்த்திய கலைஞர் கருணாநிதி அவர்களின் வாழ்த்துகள் வீண்போகவில்லை. படம் வெளியாகி வெற்றி காணத்தான் செய்தது: குறிப்பிடத் தக்க வெற்றியும்கூட.

ஆனால் காலம் செய்த கோலம் என்பார்களே, அப்படிப்பட்ட விளைவு ஒன்று ஏற்பட்டது.

'இதய வீணை' ஆரம்பத்தின்போது ஒரே இயக்கத்தில் ஒன்றாக இருந்த பொன் மனச் செம்மலும் கலைஞரும், பட வெளியீட்டின் போது இரண்டாக, இரு துருவங்களாகப் பிரிந்து விட்டார்கள்.

'இதய வீணை' படம் வெளி வருவதற்குச் சில நாட்கள் முன்பு இந்தத் 'திருப்பம்' உண்டாயிற்று. (தொடரும்)

# தமிழருக்குத் தமிழே துணை!



## ரசிகமணி ரசித்த மணிகள்

— மீ.ப.சோமு —

டி.கே. சி. யோடு தென்காசியிலிருந்து திருச்சிவரை புகைவண்டியில் பயணம் செய்து கொண்டிருந்தேன். எங்களோடு ராஜாஜியும்!

வழிநெடுக இலக்கியமும் கலைகளுமாகப் பொழுது அந்த ரயில் வண்டியின் வேகத்தில் ஓடிக்கொண்டிருந்தது. டி.கே.சியினுடைய கவிதை விளக்கத்திலும் நகைச் சுவையிலும் சொக்கிப் போய் ராஜாஜி மெய்ம்மறந்து உட்கார்ந்திருந்தார்.

வழியில் பெரிய நிலையங்களில் வண்டி நின்ற போதெல்லாம் ஏற்கனவே இந்தப் பயணத்தைப் பற்றித் தகவல் தெரிந்திருந்த அன்பர்கள் வண்டிக்குள் ஏறி வந்து, இருவருக்கும் மாலைகள் அணிவித்து வணக்கம் செலுத்திக் கொண்டிருந்தனர். பலர் தங்கள் கையிலுள்ள 'ஆட்டோகிராப்' கையெழுத்துப் புத்தகத்தில் இருவருடைய கையெழுத்தையும் வாங்கிக் கொண்டார்கள் – இலக்கிய அன்பர்கள் அரசியல் தொண்டர்கள் எல்லாருமே!

'ஆட்டோகிராப்' புத்தகத்தை எடுத்து ஒருவர் நீட்ட வேண்டியது. புன்முறுவலோடு ராஜாஜி முதலில் டிகேசியைக் கையெழுத்துப் போடச் சொல்லுவார். அவர் ஏதாவது ஒரு பாடலில் இருந்து ஒரு வரியை எழுதிக் கையெழுத்துப் போடுவார். ராஜாஜி அதற்குக் கீழே தமது ஒப்பத்தை இடுவார். வழிநெடுக இது நடந்து கொண்டிருந்தது.

இந்தப் பயணத்தில் அங்கங்கே சில மாணவர்களும் வந்து பார்த்தார்கள். அப்போது ராஜாஜி பதவியில் இல்லாத காலம். அவரே மீண்டும் நமது மாநிலத்துக்கு முதல்வராக வரவேண்டும் என்று ஒரு பெரிய கோரிக்கை எழுந்ததே. அதற்குச் சில நாட்கள் முந்திய கதை இது.

மாணவர்கள் அல்லது கல்லூரி ஆசிரியர்கள் வண்டிக்குள் வந்தார்கள் என்றால், டிகேசி ஒரு வரி எழுதுவார்.

தமிழருக்குத் தமிழே துணை

என்று எழுதிக் கையெழுத்துப் போடுவார் ரசிகமணி. அதற்குக் கீழே ராஜாஜியும் தமது ஒப்பத்தை இடுவார்.

'தமிழருக்குத் தமிழே துணை' என்ற அடிப்படையான உண்மையில் ரசிகமணிக்கு எப்போதுமே அசைக்க முடியாத உறுதி உண்டு. ரசிகமணியைத் தெரிந்தவர்கள் எல்லோருக்கும் இது தெரியும். ஆனால் ராஜாஜியும் அந்த வரிக்குக் கீழே எப்படிக் கையெழுத்திட்டார் என்று சிலருக்கு வியப்பு ஏற்பட்டது! காரணம், சென்னை மாகாணம் என்றிருந்த பெரிய நிலப் பரப்புக்குப் பிரதம மந்திரியாக (அப்போது முதலமைச்சருக்குப் பிரதம மந்திரி என்றே பெயர்) ராஜாஜி இருந்தபோது ஹிந்தி விஷயமாக ஏற்பட்ட பலமான கிளர்ச்சியைப் பலரும் நினைவு வைத்துக் கொண்டிருந்தார்கள். ராஜாஜியின் உள்ளத்தில் தமிழுக்கு எத்தகைய இடம் இருந்தது என்பதைப் பலர் புரிந்திருக்கவில்லை. குழம்பியிருந்தார்கள்.

உலக விவகாரங்களில் பலரோடு கொள்கிற தினசரித் தொடர்புக்கு ஒரு மொழியைப் பயன்படுத்துவது என்பது வேறு; இலக்கிய அனுபவம் என்பது வேறு. இந்த அடிப்படையான வித்தியாசத்தைப் புரிந்து கொண்டு விட்டால் தாய்மொழியின் இடம் நாக்கில் இல்லை; நெஞ்சகத்தில் என்பதைப் புரிந்து கொண்டுவிடலாம். இவ்விஷயத்தில் டிகேசியின் கொள்கை எதுவோ அதுவே ராஜாஜியின் கொள்கையும் ஆகும்! இதனால்தான் தாய்மொழிக் கல்வியில் டி.கே.சி.யைப்

போலவே ராஜாஜியும் ஆழ்ந்த ஆர்வம் செலுத்தினர். இசை முதலிய கலைகளில் தாய்மொழி தருகிற இன்பத்துக்கு வேறு எந்த மொழியும் ஈடாகாது என்று இருவருமே அடிக்கடி சொல்லியும் எழுதியும் வந்திருக்கிறார்கள்.

''இலக்கியம் கலை ஆகிய துறைகளில் என்னுடைய மனச்சாட்சி டிகேசியே. இந்த விஷயங்களில் அவரே எனக்கு அதிகாரி!'' என்பார் ராஜாஜி.

அப்படிப்பட்ட பண்பாட்டு அதிகாரியான டிகேசி, தமிழருக்குத் தமிழே துணை என்பதை எப்படி விளக்குகிறார் பாருங்கள்:

மூன்று மாதத்துக்கு முன்புதான் (1935) ரவீந்திரநாத தாகூர் நம்முடைய சென்னைக்கு வந்து சில உண்மைகளை நமக்குத் தெரிவித்தார். அவைகளில் ஒன்று:

''கவியை அனுபவித்து விடுவதற்காக எத்தனையோ பாஷைகளைக் கற்றேன். இங்கிலீஷ் மாத்திரமல்ல; பிரெஞ்சு பாஷை, ஜெர்மன் பாஷை, லத்தீன், கிரீக்கு ஆகிய புராதன பாஷைகளை யெல்லாம் கஷ்டப்பட்டுக் கற்றேன். என்ன பலன்? கவியின் இதயம் தெரிந்ததா? இல்லவே இல்லை. என் தாய் மொழி ஒன்றின் மூலமாகத்தான் எனக்கு அது தெரியவந்தது.''

இது நமக்கு லகுவில் விளங்கி விடாது என்று எண்ணி, தான் சொன்ன வார்த்தைக்கு ஒரு தீர்மானமும் கொடுத்தார். அதாவது:

''பிற பாஷைகளின் மூலமாகக் கவியின் உயிர்நிலையை அறியப் புகுவது, காதலியின் அருள் முறுவலைப் பெறுவதற்காக வக்கீலுக்கு வக்காலத்துக் கொடுக்கிற அழகு தான்!''

இதெல்லாம் வங்காளிகளைப் பார்த்துச் சொன்னதாகத்தான் வைத்துக் கொள்ள வேண்டும். தமிழரைப் பற்றிய உண்மையை—அதாவது தமிழைப் புறக்கணிப்பதையும், தமிழ்ப் பாட்டில் ஒன்றும் இல்லை, தமிழுக்கென்று தனிப் பண்பு (தமிழ் ஜீனியஸ்) கிடையாது, என்றெல்லாம் சாதாரணமாகச் சொல்லிக் கொண்டும், அதைவிட நம்பிக் கொண்டும் இருக்கிறதையும் தாகூர் தெரிந்திருந்தால் எப்பேர்ப்பட்ட ஆவேசமும், ஆங்காரமும் அவருக்கு வந்திருக்குமோ சொல்ல முடியாது!

ஒருவர்: ''இப்போ 'வசூல் சக்ரவர்த்தி' யாரு? கமலா? சிவாஜியா? ரஜினியா?''
மற்றவர்: மூணு பேருமில்லே. மகாராஷ்டிர முதல்வர் அந்துலேதான்! -எஸ்.சந்திரமௌளி



ஒரு தேசத்தாருடைய நாகரிகத்துக்கும், பாஷைக்கும் விரோதிகளாய் இருப்பவர் பொதுவாக அந்தத் தேசத்தை அடியோடு அழிக்கப் பார்க்கும் அக்கம் பக்கத்திலுள்ள தேசத்தார்தான்.

ஆனால் தமிழ் பாஷைக்கும் தமிழ் நாகரிகத்துக்கும் உலைவைக்க அயல் தேசத்தார் படை எடுத்து வரவேண்டிய அவசியம் ஒன்றும் இல்லை. தமிழ் மக்களே அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார்கள் என்றால் பொருந்தும்! ஆபத்தில் சிக்கி இருக்கிறோம் என்ற உணர்ச்சியே சிறிதும் இல்லை. 'தமிழ் எதற்கு? தமிழில் என்ன இருக்கிறது? தமிழைப் பற்றிப் புகழ்ந்து பேசுவதும் பாராட்டிப் பேசுவதும் வெறும் படாடோபம்; தேசபக்தி என்று சொல்லுவதில் உளுத்துப்போன பொக்கான பாகம்தான் அது: அக்கம் பக்கத்தில் உள்ளவர்களையும் அவர்கள் பாஷைகளையும் குறித்து வந்த விரோதம்'— இப்படி யெல்லாம் சொல்பவர்கள் யார்? அக்கம் பக்கத்தில் உள்ளவர்கள் அல்ல; நம் நாட்டிலேயே இருந்து கொண்டு வீட்டில் பெண்டு பிள்ளைகளோடு தமிழிலேயே பேசிக் கொண்டிருக்கும் தமிழ் மக்களே! இவ்வளவுக்கும் காரணம், ஏதோ உலகத்தில் இல்லாத, தமிழ் மக்களிடத்தில் மாத்திரம் ஏற்பட்டுள்ள சீர்கேடல்ல. நம்மவரும் மற்ற உலகத்தாரைப் போல ஒரே விதமான சீலம் படைத்தவர்கள்தான். வங்காளிகளை மட்டும் இல்லாத ஒரு பக்குவத்தில் படைத்துவிட்டானா பிரமன்? இல்லை. என்றாலும், வங்காளிகள் ஒவ்வொருவரும், ரவீந்திரநாத தாகூரிலிருந்து ரயில்வே போர்ட்டர் வரையும் ஏகோபித்துத் தங்கள் தாய் பாஷையினிடத்தில் அபார ஆர்வமும் அக்கறையும் கொண்டிருக்கிறார்கள். இதற்காகவே மேல் நாட்டார் அவர்களை மதிக்கிறார்கள்.

தமிழர்களைப் பற்றி இப்படிச் சொல்ல முடியுமா? யூனிவர்ஸிடி பட்டம் ஒன்று இரண்டு கிடைக்க வேண்டியதுதான்; பதவியும் ஏதாவது கிடைத்துவிட வேண்டியது; உடனே, 'தமிழ் படிக்கிறவன், தமிழ் தெரிந்தவன்' என்று நம்மைப் பிறர் எண்ணிவிடுவார்களோ என்ற பயம் ஏற்பட்டுவிடுகிறது. இதற்கெல்லாம் பள்ளிக்கூடங்களும் கற்பிக்கும் முறையும்தான் காரணம். ஆனாலும் முக்கிய காரணம் நம்முடைய மூதாதைகளின் பூர்வ வினையே!

எவ்வளவோ அரிய நூல்களை அவர்கள் எழுதி வைத்துவிட்டுத்தான் போனார்கள். திருக்குறள் என்ன, கம்பராமாயணம் என்ன, கலிங்கத்துப் பரணி என்ன, சிலப்பதிகாரத்தில் பதித்து வைத்திருக்கிற வைரமணிகள் போன்ற வரிப் பாடல்கள் என்ன — இவைகளின் வாடாத பெருமையையும் அழகையும் நம்மவர் அனுபவிக்கிறார்களா? ஒப்புக் கொள்வதுதான் உண்டா? தமிழர் இவைகளை அனுபவியாமல் வேறு யார் அனுபவிக்க? செவ்வாய்க் கிரகத்தில் யாரோ மக்கள் இருக்கிறார்களாம். அவர்களா வரப்போகிறார்கள் அனுபவிக்க? தமிழுக்குத் தமிழர் தான் கதி; தமிழருக்கும் தமிழே கதி!

# வீட்டில் அனைவரின் கேசப் பராமரிப்புதானே? அதற்கு நம்பகமானது, விசேட ஃபேமிலி ஷாம்பூ பாமோலிவ்.



பாமோலிவ் ஷாம்பூ: ரெகுலர், அல்லது கூடுதலான போஷாக்கிற்கு எக்.




பாமோலிவ், எல்லா வகைக் கேசத்திற்கும் ஏற்ப விசேட முறையில் தயாரிக்கப்பட்டுள்ளது. அது, வளமையான நவீன ஷாம்பூ. உங்கள் கேசத்தை நன்கு தூய்மை துலங்க வைக்கிறது. குழந்தைகளின் மென்மையான கேசத்திற்கோ மிகவும் ஏற்றது.

அது மட்டுமா? இவ்வகை ஷாம்பூக்களிலே சிக்கனமானது, பாமோலிவ் ஷாம்பூ—குடும்ப பட்ஜெட்டிற்கும் ஏற்றது.

**குடும்பத்தினர் கேசப் பராமரிப்புக்கு நேசமானது-உங்கள் பட்ஜெட்டிற்கும் ஏற்றது**

GKBE.PS.7 TM

## 13

ஊன்றுகோலைப் பிடித்தபடி நின்ற சர்மா சாந்தியைப் பார்த்துப் புன்னகைத்தார்.

''நான் போகிறேன் சாந்தி பெஹன்! உங்களுக்கு என் நன்றியை எப்படித் தெரிவிப்பது என்று புரியவில்லை.''

சாந்தி கூச்சத்துடன் சிரித்தாள். ''நன்றிக்கு அவசியமில்லை மிஸ்டர் சர்மா. உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளுங்கள். எக்ஸர்ஸைஸை மறக்காமல் தினமும் செய்யுங்கள்!''

சர்மா அவளுடைய கன்னத்தை வாஞ்சையுடன் தட்டினார்.

''செய்கிறேன். உங்களுக்கு நேரம் கிடைக்கும்போது எங்கள் வீட்டுக்கு வாருங்கள். சொந்தத் தங்கைகூட நீங்கள் கவனித்துக் கொண்ட மாதிரி இத்தனை அக்கறையுடன் கவனித்துக் கொண்டிருக்க மாட்டாள். நீங்கள் இந்தச்சின்ன அன்பளிப்பை ஏற்றுக் கொள்ள வேண்டும்.''

அவள் சட்டென்று விலகி நின்றாள்.

''என்னுடைய வேலையைத்தான் செய்தேன் சர்மா ஸாப். எந்த அன்பளிப்பையும் நான் ஏற்றுக்கொள்ள மாட்டேன்.''

''ப்ளீஸ் சாந்தி பெஹன்!''

''ஸாரி. உங்களுடைய பிரியம் எனக்குப் புரிகிறது. அது என்றைக்கும் எனக்கு ஞாபகம் இருக்கும்.''

மறுபடியும் மன்றாடித் தோற்றுப் போய் சர்மா கிளம்பினார்.

''ஆண்டவன் உங்களுக்கு ஒரு குறையும் வராமல் பார்த்துக் கொள்ளட்டும்!''

ஊன்றுகோலைப் பிடித்துக் கொண்டு நிதானமாகச் செல்லும் சர்மாவைப் பார்த்தபடி சாந்தி நின்றாள். அவர் காட்டிய பிரியமும் அபிமானமும் மனத்தை நெகிழ்வித்தன. ஆரம்பத்தில் விரைப்புடன், ஒருவித விரோதத்துடன் இருக்கும் நோயாளிகள் கூட கடைசியில் எத்தனை நெருங்கி வந்துவிடுகிறார்கள்! அவர்கள் வீட்டுக்குக் கிளம்பும் போது அவளுக்கே எவ்வளவோ முறை கண்களில் நீர் அரும்பி நின்றிருக்கிறது. நெருங்கிய பந்து பிரிந்து போகிற மாதிரி துக்கமேற்பட்டிருக்கிறது. ஆனால் அன்பளிப்பு என்று அவர்கள் கிட்டே வந்தால் அவள் ஜாக்கிரதையாக, மிகக் கண்டிப்பாக விலகிவிடுவாள். பெண்கள் கொடுக்கும் அன்பளிப்பைக் கூட அவள் ஏற்றுக் கொண்டதில்லை. எத்தனை வாலிப நோயாளிகளுக்கு அவள் மேல் காதல் ஏற்பட்டிருக்கிறது! அவர்களது பைத்தியக்காரப் பிதற்றல்களை நினைத்துப் பார்த்தால் இப்பவும் சிரிப்பு வருகிறது. ஒன்றுமில்லாததற்கெல்லாம் கத்திச் சந்தேகப்படும் நடராஜன் அவர்கள் பேச்சைக் கேட்க நேர்ந்தால் என்ன செய்வான்?



அவனுடைய நினைவு வந்ததும் சட்டென்று ஒரு சூனியம் மனசில் படர்ந்தது. அவன் அவளைத் தேடிக் கொண்டு வரவேயில்லை. அவள் தினமும் மாலையில் வீட்டுக்குப் போய்ப் பார்த்தாள். கதவு பூட்டியபடி இருந்தது. ஒரு காகிதத் துண்டில் 'நான் ஆஸ்பத்திரியிலேயே எத்தனை நாள் வாசம் செய்வது? உங்கள்கோபம் இன்னும்தணியவில்லையா?'' என்று எழுதிக் கதவுக்கடியில் நுழைத்து வைத்தாள். ஏதும் பதிலில்லை. எத்தனை நாட்களுக்கு இவன் நம்மை இப்படி அவமானப்படுத்தப் போகிறான் என்று தினமும் எழும் சீற்றத்தை அவள் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டாள். எத்தனை நாட்களுக்கு இங்கு இருக்க முடியும்? நேற்றே மிஸ் வயலெட் முணுமுணுத்தாள்.

''சாந்தி, நீயே இப்படி ரூல்ஸை பிரேக் பண்ணா எப்படி?''

''போயிடறேன் ஸிஸ்டர். தினமும் வீட்டுக்குப் போய்ப் பார்க்கத்தான் செய்யறேன். கதவு வெளியிலே பூட்டியிருக்கு.''

"அந்த மாதிரி ஒரு மனுஷனோட இருந்து நீ என்ன சுகத்தைக் கண்டே? பேசாமெ விடு. குழந்தை குட்டின்னு இருந்தாத்தான் நூறு யோசனை பண்ணணும். உனக்குத்தான் இல்லையே. எதுக்கு அந்த ஆளுகிட்ட தொங்கிண்டிருக்கே?''

அவள் அதற்கு நேரடியாகப் பதில் சொல்லாமல் நின்றாள்.

''நீ என்ன பண்ணுவியோ அது எனக்குத் தெரியாது. உன் இஷ்டம். ஆறு தங்கறதுக்கு நீ ஏதாவது அரேஞ்ச்மெண்ட் பண்ணிக்கணும். ஆர். எம். எஸ். ஒரு கேள்வி கேட்டுட்டார்னு அப்புறம் அசிங்கம்.''

''சரி ஸிஸ்டர்.''

''நீ இங்கே இருக்கிறதினாலே யாருக்கும் ஒண்ணும் தொந்தரவு இல்லேதான். இருந்தாலும் ஒரு பேச்சு வரக்கூடாது பாரு! ஹாஸ்டல்லே ஒரு ரூம் எடுத்துக்கோயேன்!''

''இன்னும் இரண்டு நாள்லே சொல்றேன் ஸிஸ்டர்.''

''அதுதான் சரி.''

அவமானமாக இருந்தது. நினைத்துப் பார்க்கவே. இங்கு வேலை செய்யும் இந்த ஐந்து வருஷங்களில் ஒரு முறை கூட எந்தப் புகாரும் அவள் மேல் வந்ததில்லை. இப்பொழுது ஆர். எம். எஸ். வரை இந்த விஷயம் போய் விட்டால் எத்தனை பெரிய அவமானம்!

இன்றைக்கு மாலை மறுபடியும் வீட்டுக்குப் போய்ப் பார்க்க வேண்டும் என்று அவள் நினைத்துக் கொண்டாள். அதிர்ஷ்ட வசமாக வீடு திறந்திருந்தால் அவன் எதற்காக இப்படி யெல்லாம் செய்கிறான் என்று கேட்டு விடவேண்டும். தன்னுடன் இனிமேல் சேர்ந்திருக்கவே விருப்பமில்லையா என்று கேட்டு விடவேண்டும்.

வெளி பால்கனி வழியாகப் பார்க்கையில் சர்மா தன் மகனின் தோளைப் பிடித்துக் கொண்டு போவது தெரிந்தது. காரில் ஏறுகிற சமயத்தில் கையசைத்தான். அவளுக்குக் கண்களில் நீர் நிறைந்தது.

---

**''தலைவர் மேடைக்கு வந்துட்டாரே... இன்னும் ஏன் எல்லோரும் திரும்பித் திரும்பிப் பாக்கறாங்க?''**

**''சுண்டல் விக்கிறவரை இன்னும் காணோம்!''**

**- முத்துதங்க ஐயப்பன்**




---

முன்பின் தெரியாதவர்கள் — எந்தவிதமான சம்பந்தமும் இல்லாதவர்கள் சில நாட்களே பழக்கத்தில் ஒட்டுதலும் கண்ணீரையும் காண்பிக்கும்போது ஆறு வருஷப் பழக்கத்தில் அவனுக்கு ஏன் மயிரிழை ஒட்டுதல் கூட வரவில்லை? என் சிரிப்பு அவனுக்கு இதத்தை அளிக்கவில்லையா? என் கொஞ்சலை அவனுக்கு ஏற்கவில்லையா?

''இந்த மாதிரி புருஷனோட நீ எதுக்கு இன்னும் இருக்கணும்?''

அவன் இப்படிப்பட்ட ஆள் என்கிற அனுமானம் மெள்ள மெள்ள ஊர்ஜிதமான பிறகு இங்கு இருக்கும் நர்ஸ்கள் அடிக்கடி செய்யும் உபதேசம் இது.

''குழந்தை குட்டியும் இல்லே. எதுக்கு யோசனை பண்றே?''

அவளுக்கே புரியவில்லை. ஆறு வருஷ பந்தத்தைச் சட்டென்று உதற மனம் துணியவில்லை. மாமா கஷ்டப்பட்டு அலைந்து திரிந்து செய்வித்த கல்யாணத்தை விட்டு விலகுவது அவரை அவமானப்படுத்துகிற மாதிரி என்று தோன்றிற்று.

''ஸிஸ்டர்....!''

அவள் சட்டென்று சுயநினைவு வந்து உள்ளே திரும்பினாள். சர்மா இருந்த படுக்கைக்கு வேறு ஒரு பேஷண்ட் தயாராக வந்தாகி விட்டது. மறுபடியும் ஏதோ ஒரு ஆக்ஸிடெண்ட் கேஸ் என்று தோன்றிற்று. வலது கையும் இடது காலும் பிளாஸ்டரில். பேஷண்டின் விரிந்த பார்வையில் ஒரு பீதி தெரிந்தது. சட்டென்று அவள் மனசில் ஓர் அனுதாபம் பிரவாகமாய்ப் பொங்கிற்று. எத்தனை துன்பங்கள் — எதேச்சையாக முன்னறிவிப்பில்லாமல் வரும் துன்பங்கள்! நம் சக்திக்கு மீறித் தவிர்க்க முடியாமல் வரும் விபத்துக்கள்! இத்தனை கஷ்டங்கள் மனுஷ்ய யத்தனத்தின் வரம்புக்கு அப்பால் இருக்கும்போது மனுஷ்ய யத்தனத்துக்குள் இருக்கும் விஷயங்களில் எத்தனை அசட்டையாக இருக்கிறோம்! காலையும் கையையும் நன்றாக வைத்துக் கொண்டு மனசை முடமாக்கிக் கொள்கிறோம்!

''நர்ஸ் சாந்தி!''

''இதோ வரேன்!''

பேஷண்டுக்கு இருபத்தி ஐந்து வயசுக்குள் இருக்கும். நல்ல கட்டுமஸ்தான உடம்பாக இருந்தான். அவன் பக்கத்தில் ஒரு வயசான அம்மாள் நின்று கொண்டிருந்தாள். தென்னாட்டைச் சேர்ந்தவள் என்று இரட்டை மூக்குத்தி தெரிவித்தது. அழுதிருப்பாள் என்று தோன்றிற்று.

சாந்தி கேஸை ஆராய்ந்தாள். காலும் கையும் பலத்த ஃப்ராக்சர் என்பதைத் தவிர வேறு எந்த விபரீதக் கோளாறும் இல்லை.

''நீ ஸ்கூட்டரை வெளியிலே எடுத்துண்டு போனபோது நல்ல ராகுகாலம். நான் அப்பவே சொன்னேன், கையும் காலும் ஒடிச்க்காமெ இருக்கணுமேன்னு.''

''நீ நினைச்சியோன்னோ அதுதான் இப்படி ஆச்சு.''

அந்தம்மாளின் முகம் தொங்கிப்போயிற்று. ஏற்கனவே கலங்கியிருந்த கண்கள் மீண்டும் கலங்கின.

"கவலைப்படாதீங்கம்மா. இவருக்கு வெறும் ஃப்ராக்சர்தான். வேறே ஒண்ணும் கோளாறில்லே."

தமிழ்ப் பேச்சைக் கேட்டுச் சட்டென்று ஒரு மலர்ச்சி தெரிந்தது.

கௌதம்மின் படுக்கையருகில் ஆணி அறைந்த மாதிரி அவனுடைய மனைவி உட்கார்ந்திருந்தாள். எத்தனை அழகாயிருக்கிறாள்! துளிக்கூட சோர்வைக் காண்பிக்காமல் புன்னகையுடன் நாள் முழுவதும் அங்கு உட்கார அவளால் எப்படி முடிகிறது என்று ஆச்சரியமாக இருந்தது. எப்பவும் சிரித்த முகமாக அவனுக்கு எதுவுமே விபரீதமாக ஆகிவிடாத மாதிரி ஊர்க் கதைகளையெல்லாம் அவனிடம் சொல்லிக் கொண்டு—

இவளால் எப்படி முடிகிறது? அவனுடைய எதிர்காலம் எப்படி இருக்கப்போகிறது என்ற முழுமையான பிரக்ஞை அவளுக்கு இருக்குமா? விஷயம் தெரிந்துதான் இப்படி இருக்கிறாள் என்று தோன்றிற்று.

ஹரி ஏதோ ஒரு புத்தகத்தில் ஆழ்ந்திருந்தான். அவள் கொடுத்த புத்தகம்.

"ஹல்லோ ஹரி!"

சட்டென்று புத்தகம் கீழே இறங்கிற்று. ஒரு பெரிய புன்னகை பின்னால் தெரிந்தது.

"ஹல்லோ. இப்பத்தான் அந்தப் புத்தகத்தைத் தூக்கி எறியலாம்னு இருந்தேன். நீங்க வந்து நிக்கறீங்க."

"என் முகத்திலே எறியப் போறீங்களா?"

"எறியலாம் போலத்தான் ஆத்திரம் வரது. உபதேசம் செய்யறவங்களுக்கென்ன. ஈஸிச் சேரில் உட்கார்ந்துண்டு உபதேசம் பண்ணலாம்."

"நீங்க புத்தகத்தை ஒழுங்காப் படிக்கல்லே. இந்தப் புத்தகம் எழுதினவங்க உங்களை மாதிரியே பாரப்ளீஜியா வந்த டாக்டர்."

அவன் தன் அதிர்ச்சியை மறைத்துக் கொண்டு சொன்னான்:

"அதெல்லாம் கதை. புத்தகம் விற்பனை ஆகணும்னு விடறீங்க!"

அவன் சிரித்தான்.

"நல்லதைச் சொன்னா எடுத்துக்க மாட்டீங்க. நீங்களா நம்பிக்கையையும் வளர்த்துக்க மாட்டீங்க. முயற்சியும் செய்ய மாட்டீங்க. என்னை என்ன செய்யணும்கிறீங்க?"

"கௌதம்முடைய மனைவி மாதிரி ஒருத்தி வேணும்!"

அவன் சிரித்தான்.

"நல்லா இருக்கே கதை? எந்தக் கடையிலே விக்கும் சொல்லுங்க நான் வாங்கிட்டு வரேன்!"

அவனது உடையைப் பரபரவென்று மாற்றிக் கொண்டிருந்த சாந்தியின் கையை அவன் பற்றினான்.

"உங்களுக்குக் கல்யாணம் ஆகாம இருந்திருந்தா எத்தனை நன்னாயிருக்கும்னு நினைச்சுக்கிறேன்."

"என்ன செய்திருப்பீங்க?"

"கல்யாணம் பண்ணிண்டிருப்பேன்!"

"நல்ல கூத்து. நான் சம்மதிச்சிருப்பேன்னு எப்படி நினைக்கிறீங்க?"

"உங்க கண்ணைப் பார்த்தா நன்னாத் தெரியறது. நிச்சயம் ஏமாத்தியிருக்க மாட்டீங்க!"

அவள் தூக்கி வாரிப் போட அவனைப் பார்த்தாள். இது என்ன பைத்தியம்?

"ஏன் சாந்தி? உண்மையைச் சொல்லுங்க. எனக்கு என்ன குறைச்சல்? என் இடுப்புக்குக் கீழே என்ன நடக்கிறதுன்னு எனக்குத் தெரியல்லேங்கிறதைத் தவிர எனக்கு என்ன குறைச்சல்?"

அவள் பக்கென்று சிரித்தாள்.

"உங்களுக்கு ஒரு குறையும் இல்லே. எனக்குக் கல்யாணம் ஆயிடுத்துங்கறது தான் குறை."

"வாட் எ பிட்டி!"

அவள் அவன் கையை மெல்ல விலக்கித் தன் வேலையைத் தொடர்ந்தாள். தன் கன்னங்களில் சூடேறியிருப்பதைக் கண்டு திகைப்பேற்பட்டது. இவனுடைய வார்த்தைகளிலும் பார்வையிலும் ஏதோ ஆகர்ஷிக்கும் சக்தி இருக்கிற மாதிரி இருந்தது. லேசாக ஒரு அதிர்வு ஏற்பட்டது.

அவள் சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்டாள். நெருப்பு மாதிரி இருந்த மனசில் ஒரு நிழல்கூட இதுவரை பட்டதில்லை. இந்த மாதிரி தன் மனசு ஒரு வினாடிக்கேனும் சலனப்படலாம் என்கிற சம்சயம் தான் நடராஜனின் போக்குக்கு அடிப்படைக் காரணம் என்று நினைத்துக்கொண்டாள். அன்று மாலை வழக்கம் போல் வீட்டுக்குச் சென்றாள்.

அவன் இருந்தான். அவளைப் பார்த்ததும் இரைந்தான்.

"எந்தத் தைரியத்திலே வீட்டுக்குள்ளே நுழையறே? ஒரு வாரமா எவனோடயோ இருந்துட்டு எத்தனை திமிர் இருந்தா என் வீட்டிலே காலை வைப்பே?"

(தொடரும்)



ஆசிரியர்: "தண்ணியில் வாழும் உயிரினத்திற்கு ஒரு உதாரணம் சொல்லுன்னா, அப்பாங்கறியே...!"

மாணவன்: "தண்ணிலதான் என் உயிரே இருக்குன்னு எங்க அப்பா அடிக்கடி சொல்லுவார் சார்...!"

–கிணத்துக்கடவு ரவி

# உங்களை வரவேற்கிறது கனரா வங்கி! உகந்த பல திட்டங்களைக் காணீர் அங்கே!!



குடும்பத்தில் குழந்தைகளின் கல்வி, வேலை, திருமணம் முதலிய பல அன்றாடப் பிரச்சினைகள் உங்களுக்கு உண்டு மற்றும், வீடு வாசல் என்ற ஆசைகளும் இருக்கும். 'இடுக்கண் களையும் நட்பு' போல உங்களுடைய இத்தேவைகளை பூர்த்தி செய்ய, அணுகுவீர் **கனரா வங்கியை.**

குழந்தைகளின் உயர் கல்விக்கு உத்திரவாதம் அளிப்பது எங்கள் **'வித்யா நிதி'** திட்டம்; நடுத்தர வர்க்கத்தினர் எளிதில் சேமிக்க, எங்கள் **ரெகரிங் டெபாசிட்;** உங்கள் சேமிப்பின் வட்டியில் ஓய்வு காலத்தை நிம்மதியாய்க் கழிக்க உதவுவது எங்கள் **நிரந்தராத் திட்டம்.....**

இப்படி வகைவகையாய் உங்களுக்காகவே ஏற்படுத்தப் பட்டுள்ள எங்கள் பல்வேறு திட்டங்கள்; **காமதேனு; வைப்பு நிதித்திட்டம்; சேவிங்ஸ் பாங்க்** முதலியன.

உங்கள் வீட்டிற்கு அருகாமையில் எங்கள் கிளை ஒன்று உண்டு. அங்கு எங்கள் கிளை மேலாளரைச் சந்தித்து இன்றே உங்களுக்குத் தகுந்த சேமிப்புக் கணக்கில் சேருங்கள்.

இச் சின்னத்தின் மூலம் எங்கள் நட்புக் கரங்களை நீட்டி வரவேற்கிறோம்

# கனரா பாங்க்



(தேசியமாக்கப்பட்ட பாங்க்)

**நாடெங்கிலும் 1,300 க்கும் மேற்பட்ட கிளைகள் உள்ளன.**

maa (S) CB 14 Tam c 81

# அருணா உயர்ந்து விட்டாள்!

எம்.கே.சங்கரன்



அருணா வேலைக்குப் புறப்பட்டு வந்தாள்.

''போயிட்டு வரேம்மா!''

''இந்த வேலையிலாவது நெலைச்சிருப்பியா?''

தாயை விரக்தியுடன் பார்த்தாள்.

''குடும்பக் கஷ்டத்தை உணர்ந்துண்டேம்மா. நிச்சயமா இந்த வேலையில் நெலைச்சிருப்பேன்.''

தெருவில் இறங்கி வேகமாக நடந்தாள்.

நல்ல சம்பளம் கிடைத்த இரண்டு வேலைகளை இழந்தாச்சு. அப்புறம் வேலை தேடி அலைஞ்ச அலைச்சல்... தண்ணீரைக் குடித்துத் தாயும் மகளும் ஒருவரை யொருவர் பார்த்து அழுதது... தம்பி பசி மயக்கத்தால் சுருண்டு விழுந்தது... போதும் இந்த அனுபவம். அனுசரிச்சு நடந்திருந்தால் இந்தக் கஷ்டம் வந்திருக்காது.

ராணி டெக்ஸ்டைல்ஸ் நகரில் பெரிய வர்த்தக நிலையம். ஐம்பது சிப்பந்திகள்! அருணாவுக்கு அங்கு சேல்ஸ் வேலை. முன் பார்த்த வேலைகளை விடச் சம்பளம் குறைவுதான். ஓரளவு பசியையாவது நிவர்த்திக்கிறது.

இந்த வேலையை இழக்கவே கூடாது. இரண்டு மாதங்கள் எந்தப் பிரச்னையும் இல்லை. கொஞ்ச நாட்களாகத்தான் ராமானுஜத்தின் நடவடிக்கைகள்....

ராமானுஜம் ராணி டெக்ஸ்டைல்ஸுக்குப் பிரதான ஏஜெண்ட். முதலாளி கடைக்கு வருவதில்லை. சின்ன ஜவுளிக் கடையாய் ஆரம்பித்த காலத்திலிருந்தே வேலை பார்ப்பவர் ராமானுஜம். முதலாளியின் முழு நம்பிக்கைக்கும் பாத்திரமானவர். கடைக்கு முதலாளி மாதிரி. சரக்குக் கொள்முதலிலிருந்து சிப்பந்திகளைச் சேர்ப்பது நீக்குவது வரை அதிகாரம் பெற்றவர். தப்பு வழிக்கெல்லாம் போகாத பெரிய மனுஷன்தான். அருணா வந்ததிலிருந்து அவரை அறியாது ஏற்பட்ட சபலம்... அருணாவின் தலையில் விதிச்ச விதி அவளை வேலைக்குச் சேர்த்துக் கொண்டவர்கள் நல்லவர்களாக இருந்தாலும் அவள் அழகு அவர்கள் மனசைக் கெடுத்துவிடுகிறது.

''அருணா உன்னை எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு. இந்த மாசத்திலிருந்து உனக்குச் சம்பளம் கூடுதலாப் போட்டிருக்கிறேன்.''

''தேங்க்ஸ்.''

''தேங்க்ஸ் மட்டும்தானா?''

வேறென்ன வேண்டும் என்பது போல் அருணா ஒரு பார்வையை வீசினாள்.

மெதுவாக அவள் கரங்களை ஸ்பரிசித்தார்.

''யாராவது வந்துவிடப் போகிறார்கள்!'' கிசுகிசுத்தாள் அருணா.

ராமானுஜம் உருகிப் போனார்.

கட்டுப்பாடாக மரியாதையோடு வாழ்ந்தவர். தனிமையில் எங்கு எப்படிச் சந்திப்பது என்ற துணிவு ஏற்படாமையால் நாட்கள் தள்ளிக் கொண்டிருந்தன.

வீட்டிலிருந்து புறப்படத் தாமதமாகி விட்டது. ஒரு மணி நேரம் தாமதம். ராமானுஜத்தின் அபிமானம் கிடைத்த தைரியம் அவள் மனசில் பயமில்லை.

கடைக்குள் காலடி வைத்ததும் கல்லாவில் கம்பீரமாக வீற்றிருந்த புதிய மனிதரைக் கண்டதும் மிரண்டாள் அருணா.

''நம்ம கடை முதலாளி.'' — உடன் வேலை செய்பவர்கள் சொல்லத் தெரிந்தது.

நெஞ்சில் பயம் பிடித்துக் கொண்டது. நடுக்கத்துடன் முதலாளியின் எதிரில் சென்றாள். ''எக்ஸ்கியூஸ் மீ. இன்றைக்கு ஒரு நாள் லேட்டாயிடுத்து...''

''பரவாயில்லை. நீதான் புதுசா வேலைக்குச் சேர்ந்த பெண்ணா? உன்னைப் பத்தி ராமானுஜம் சொல்லி யிருக்கார். அக்கவுண்ட்ஸ் எல்லாம் மெயின்டைன் பண்றியாம். புத்திசாலிப் பொண்ணு என்றெல்லாம் என்னிடம் சொன்னார். போய் வேலையைப் பார்.''

தப்பித்தோம் பிழைத்தோம் என்று தன் இடத்துக்குப் போனாள். முதலாளி முதல்

நடவையாக வந்தபோது வேட்டாகி வந்தது அவள் மனசை உறுத்திக் கொண்டிருந்தது.

ராமானுஜமும் எங்கே?

அவர் மனைவி நீண்ட நாள் சீக்காளி. திடீரென மயங்கி விழுந்து விட்டாள். நாகர்கோவில் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு செல்ல நேரிட்டது. அவளை நன்றாகக் குணப்படுத்தி விட்டு வந்தால் போதும் என்று முதலாளி அனுமதி அளித்து விட்டார். அவர் வர இரண்டு மூன்று மாதங்கள் ஆகலாம். கடையைக் கவனிக்க முதலாளியே வருகிறார்.

அருணாவிடம் இயல்பாய் இருக்கும் ஈர்ப்புத் தன்மை முதலாளி கல்யாண சுந்தரத்தையும் விட்டு வைக்கவில்லை. அவள் இளமையின் செழிப்பைக் கள்ளத்தனமாக ரசித்து எடை போட ஆரம்பித்தார்.

''அருணா, வருகிற ஒவ்வொருவனும் கண் கொத்திப் பாம்பு மாதிரி உன்னையே பார்க்கிறது எனக்குச் சகிக்கல்லே. சேல்ஸுக்கு நீ நிக்க வேண்டாம். அக்கவுண்ட்ஸுக்கு வந்துடு.''

தம் அருகில் உள்ள ஆசனத்தில் அவளை அமர்த்திக் கொண்டார். தினமும் அருணாவின் முக தரிசனம் காணாமல் இருக்க அவரால் இயலவில்லை.

கல்யாணசுந்தரத்தின் மனைவி சிவகாமிக்கு முரண்



டுக் குணம். மகள் ராணி பிடிவாதக்காரி. வீட்டில் அவருக்கு நிம்மதி இருப்பதில்லை. அவர் மனம் புதிய சுகத்தில் நாட்டம் கொண்டது.

ராமானுஜம் மூன்று மாதங்கள் மனைவிக்கு அரும்பாடுபட்டு அவளைப் பிழைக்க வைத்து ஊர் வந்து சேர்ந்தார். கடைக்கு வந்ததும் அவர் கண்கள் அருணாவைத் தேடின.

அருணா எங்கே?

அவரே எதிர்பார்க்காத சேதி. அவர் நெஞ்சை வெடி வைத்துத் தாக்கும் செய்தி.

அருணா இப்பொழுது சேல்ஸ் பெண் அல்ல. முதலாளி கல்யாணசுந்தரத்தின் நிரந்தர நாயகி. அவள் பெயருக்குப் பெரிய வீடு, கவலை இல்லாம வாழ நிலபுலன்கள் எல்லாம் வாங்கிக் கொடுத்திருந்தார். ராமானுஜத்துக்கு எட்டாத உயரத்துக்குப் போய் விட்டாள் அருணா. ஏமாற்றத்தைத் தாங்கிக் கொள்ள அவர் மிகவும் சிரமப்பட்டார்.

கல்யாணசுந்தரம் அருணாவே உலகம் என்று அவள் வீட்டையே தஞ்சமடைந்தார். மனைவியும் மகளும் அவரை மதிக்கவில்லை. கல்யாணசுந்தரம் அருணாவின் வீடே கதி என்று கிடப்பதற்கு அவர்கள் அலட்சியமே காரணமாயிற்று. வீட்டுக்கே போவதில்லை.

அருணாவுக்கு ஆண் குழந்தை பிறந்தது. குழந்தையின் பிறந்த தின விழாவை ஊரைக் கூட்டி நடத்தினார். அருணா அவர் மனைவி என்ற ஸ்தானத்துக்கு உயர்ந்தாள்.

ராமானுஜத்தின் மனைவி போய்ச் சேர்ந்தாள். பருவமடைந்த ஒரே மகள்தான். வீடு வாசல், வயல் என்று அவருக்கு ஓரளவு வசதிகள் உண்டு. மறு கல்யாணம் செய்வதா வேண்டாமா என்ற குழப்பத்தில் இருந்தார்.

ஃபோன் மணி ஒலித்தது. ராமானுஜம் ரிசீவரை எடுத்தார்.

''ஹலோ!! அருணா பேசறேன்.'' — அவள் குரலில் பதற்றமும், வேகமும் ஒலித்தது. ''முதலாளிக்குத் திடீர்னு ஹார்ட் அட்டாக் வந்திருச்சு. நம்ம டாக்டராலே முடியல. பெரிய ஆஸ்பத்திரியில சேர்த்திருக்கேன். அவங்க வீட்டுக்குத் தகவல் கொடுத்திடுங்க'' அருணா அழுது கொண்டே சொன்னாள்.

ராமானுஜம் உடனே முதலாளி வீட்டுக்குப் போன் பண்ணிச் சொன்னார். சிவகாமி சர்ச்சையில் ஈடுபட்டாள். 'அவள்' சொல்லிப் போறதா என்ற சுய கௌரவம். நாலு பேர் நல்ல வார்த்தை சொல்ல, மகளை அழைத்துக் கொண்டு ஆஸ்பத்ரிக்குச் செல்வதற்குள் கல்யாண சுந்தரம் அபாய கட்டத்தைக் கடந்த சமன நிலைக்கு வந்து விட்டார். தாயும் மகளும் வந்த சமயம் அருணா கல்யாணசுந்தரத்தை மார் போடு சாத்திய வண்ணம் மருந்து கொடுத்துக்கொண்டிருந்தாள். அதைப் பார்க்கச் சகிக்காத சிவகாமியும் ராணியும் எட்டத்தில் நின்று கறுவியவாறு திரும்பி விட்டனர்.

ராமானுஜம் முதலாளியைப் பார்க்க வந்திருந்தார். ஐந்து வருடங்களுக்குப் பின் அருணாவைப் பார்த்ததும் அவர் நெஞ்சிலிருந்து ஏக்கப் பெருமூச்சு வெளிப்பட்டது. அன்று போல் இன்றும் அவள் இளமை மாறாமல் இருந்தது. அருணா அவரை எதிர் நோக்கக் கூசித் தலையைக் கவிழ்த்துக் கொண்டாள்.

''அருணா, கொஞ்சம் வெளியே போய் இரு. நான் இவரிடம் சில விஷயங்கள் பேசணும்'' என்றார் கல்யாணசுந்தரம்.

''ராமானுஜம், நான் பிழைக்கப் போற தில்லை. அருணா இளவயசுப் பெண். எனக்கு வாரிசு தந்திருக்கிறாள். அவளுக்குப் பாதகமில்லாமல் சொத்து அவளுக்கும் சேரணும். ஒரு உயில் எழுதிக் கொண்டு வாரும்.''

ராமானுஜம் மூளை வேலை செய்தது. உறங்கிக் கிடந்த உணர்ச்சிகள் அணை உடைத்துக் கிளம்பின. இதுவரை அவர் முதலாளிக்குத் துரோகம் செய்ததில்லை. தனக்குக் கிடைத்த இன்பத்தை முதலாளி தட்டிப் பறித்த ஆத்திரம் நீறு பூத்த நெருப்பாய் இதயத்தில் பதுங்கிக் கிடந்தது. இந்தச் சந்தர்ப்பத்தை விட்டு விட்டால், இழந்துபோன" ஆசையை நிறைவேற்ற முடியாது.

புத்திசாலித்தனமாகக் காரியத்தை முடித்தார். உயிலோடு வந்து சாதுரியமாக வாசித்துக் காட்டினார். கல்யாணசுந்தரம் நம்பிக்கையோடு கையெழுத்திட்டுக் கொடுத்தார். அன்றே கல்யாணசுந்தரத்தின் உயிர் பிரிந்தது.

அவர் மறைந்த செய்தி கேட்டவுடனேயே சிவகாமியும்ராணியும் ஆஸ்பத்திரிக்கு வந்து விட்டனர். அவரது உடம்பை உரிமை கோரி வீட்டுக்கு எடுத்துச் சென்றனர். மூன்று நாட்கள் இரவு பகலாகப் பாடுபட்டு அவரைக் கவனித்த அருணா அலட்சியப் படுத்தப்பட்டு ஆஸ்பத்திரியிலேயே நின்றாள்.

ராமானுஜம் பிரேதத்தை அனுப்பிவிட்டு விக்கித்து நின்ற அருணாவிடம் வந்தார். ''அருணா, முதலாளி வீட்டுக்கு நீ வந்தால் உனக்கு மரியாதை கிடைக்காது. உன்னை மயானத்துக்கு நான் அழைத்துச் செல்கிறேன்'' என்றார்.

ராமானுஜம் அருணாவை டாக்சியில் சுடுகாட்டுக்கு அழைத்துக் கொண்டு சென்றார். அனைவரும் அதிசயத்துடன் பார்த்தார்கள்.

பதினோராம் நாள் விசேடம். சிவகாமி வீட்டில் உறவினர் சூழ நடந்த அதே வேளை

''மாதம் ஒரு புத்தகம் போடலாமா என்று பாக்கிறேன். போட்டால் வித்திடுமா?''
''ஒரு புத்தகம் போட்டால் வித்துடும் நூறு, ஆயிரம்னு போட்டால்தான் விக்கிறது கஷ்டம்!''
-பெ. கலாசாமி



கவிழ்ந்துவரும்,
தழுவிநிற்கும்
மென்மை...
ஒளிபடைக்கும் பிலிப்ஸ்



புதிய

# அர்ஜென்ட்டா-K

புத்தம்புதிது. கண்ணுக்கிதம்.
நிழலேயற்ற ஒளி. படைத்திடுவோர்
பிலிப்ஸ். ஆர்ஜென்ட்டா-K.
பால்வண்ணமான பல்பு.
இதற்கேது இணை!

**அளவான மின்னலகில் அதிக ஒளிவெள்ளம்**

HTB-PEI-6701

பிலிப்ஸ்



யில் அருணா தன் வீட்டில் தனக்கு வேண்டியவர்களை அழைத்துச் சிறப்பாக நடத்தினாள். ராமானுஜம் அருணா நடத்திய விசேடத்தில் முழுமையாகக் கலந்து கொண்டது சிவகாமியைச் சிந்திக்க வைத்தது.

''அம்மா, நம்ம ஏஜண்டுக்கு அருணா மேல் ஏற்கனவே மயக்கம் உண்டு. முதலாளியை மயக்கிய மாதிரி அருணா இவரையும் வலைக்குள் போட ஆரம்பிச்சிருக்கா. நீங்க ஜாக்கிரதையா இருக்கணும்.''

கடை ஊழியர்கள் சிவகாமியிடம் ரகசியமாக எச்சரித்தனர்.

சிவகாமி ராமானுஜத்தை வரவழைத்துக் கடை வரவு செலவுகளை ஒப்படைக்கும்படி கட்டளை இட்டாள்.

''அம்மா, சொல்ல எனக்கு ரொம்ப வருத்தமா இருக்கு. உங்களுக்கு வீடு, நில புலன்களை முதலாளி முந்தியே எழுதித் தந்திட்டார். நீங்க முதலாளியை அனுசரிக்காமப் போயிட்டீங்க. அஞ்சு வருஷம் அருணாவோட குடித்தனம் நடத்திட்டார். ஆண் வாரிசு வேறே வந்து தொலைச்சுட்டுது. அந்த அபிமானத்தில் கடையை அருணாவுக்கு உயில் எழுதி வச்சுட்டார்.''

''நீங்க மனம் வச்சா உயிலை இல்லாமல் பண்ணி விடலாமே?''

''முதலாளி எம் மேலே நம்பிக்கை வச்சுச் செஞ்சதுக்கு வஞ்சனை பண்றதா? முடியாது.''

''கடையை எப்படிக் கைப்பத்தணும் என்பதை நாங்க பார்த்துக்கொள்கிறோம்.''

சிவகாமி போட்ட கூச்சலை ராமானுஜம் இந்தக் காதில் வாங்கி மறு காதில் விட்டு விட்டுப் போய்விட்டார்.

அவர் சிந்தனை கொடி கட்டிப் பறந்தது.

'ராணி டெக்ஸ்டைல்ஸ்' — இந்த ராணியை எடுத்துவிட்டு அருணா டெக்ஸ்டைல்ஸ்னு மாத்தணும். இனி கடை அருணாவுக்குத்தானே?

**த**மக்கு உடைமையாகப் போகும் அருணாவின் நினைவில் மூழ்கியவாறு அவள் வீட்டுக்குச் சென்றார். அருணா வெண்ணிற ஆடையோடு நிற்பதைக் கண்டதும் அவர் முகம் சுழித்தது.

''அருணா, எல்லா விசேஷமும் முடிஞ்சாச்சு. இனி வெள்ளைச் சேலை எதற்கு? முன்போல் மாடர்னா கலர் புடவை உடுத்திக்கிட்டு அழகா இருக்கணும்'' என்றார்.

''நீங்க எந்த அர்த்தத்தில் சொல்றீங்க?''

''புதுசா உனக்குச் சொல்லணுமா? உன் மேல் எனக்கு இருக்கிற ஆசையை மறுபடியும் சொல்லணும் என்கிறாயா? என்ன புருஷன்? தாலி கட்டியவரா?''

''என் மனசாட்சிதான் தாலி.''

''உன்னோடு வாதாட நான் வரவில்லை. முதலாளி சின்ன வசதிதான் உனக்கு ஏற்படுத்தச் சொன்னார். நான்தான் கடை உரிமை முழுவதும் உன் பேருக்குத் தந்திரமாக எழுதி வாங்கிட்டேன். கடைன்னு சாதாரணமா நினைக்காதே. நீயும் உன் பிள்ளையும் பிள்ளைக்குப் பிள்ளையும் கூட ஆயுள்வரை ராஜபோகம் நடத்தலாம். லட்சம் லட்சமாக வருமானம். நீ மறுத்தே



மானேஜர்: '':பைல் பார்க்கும்போது அடிக்கடி தலையைத் தடவாதே!''

அவன்: ''ஏன் ஸார்..?''

மானேஜர்: '':பைலில் இருக்கிற ஒவ்வொரு பேப்பரிலும் கறுப்புக் கறுப்பா ஹேர் டை ஒட்டிக்கிறதை நீ கவனிக்கலையா?''

உ. ராஜாஜி

உயிலைக் கிழிச்சுத் தூர எறிஞ்சிடுவேன். கடை ஆட்டமாட்டிக்கா சிவகாமி குடும்பத்துக்குப் போய்ச் சேர்ந்துடும். நீ நடுத் தெருவில் நிற்க வேண்டியதுதான்.''

''அந்த நிலைக்கு அவர் எங்களை விட்டுவிடவில்லை. ஏற்கெனவே அவர் தந்தது எங்கள் வாழ்வுக்குப் போதும். லட்சக் கணக்கா வருமானம் கிடைக்கிறது என்கிறதுக்காக எனக்கு ஏற்பட்டிருக்கும் மரியாதையை இழக்க நான் தயாராக இல்லை. நீங்கள் போகலாம்.''

**ரா**ணி டெக்ஸ்டைல்ஸ் கைவிட்டுப் போய் விடக் கூடாது என்பதில் சிவகாமி தீவிரமாக இருந்தாள். ராணியை ராமானுஜத்துக்குக் கல்யாணம் செய்து கொடுத்து விட்டால்?

''ராணி, நம்ம கடை லட்சம் லட்சமா வருமானம் தரக் கூடிய ஸ்தாபனம். அது அருணா கிட்டப் போயிட்டா அவள் ரொம்ப உயரத்துக்குப் போயிடுவா. நாம் மதிப்பில்லாமல் ஏழை எளியவங்களைப் போல சாதாரணமாய்ப் போயிடுவோம்.'' தாய் போட்ட தூபத்தில் ராணி மசிந்து விட்டாள்.

**சா**வாமி தரிசனத்தை முடித்துக் கொண்டு அருணா கோவிலிலிருந்து தன் குழந்தையோடு வந்து கொண்டிருந்தாள். கோவில் வாசலில் காரிலிருந்து ராமானுஜம் ராணியுடன் இறங்குவதைப் பார்த்தாள். ராணிக்குக் கணவனாக நிற்கிற பெருமையில் அருணாவை அலட்சியப் பார்வை...

ஒரு கடைக்காக அவசரக் கோலத்தில் பொருந்தாத மணம் செய்து கொண்ட அந்தச் சின்னப் பெண்ணைப் பார்க்க அவளுக்கு அனுதாபம் ஏற்பட்டது. தன் மரியாதைக்காகப் பணச் சுரங்கமான பெரிய ஸ்தாபனத்தை உதறி விட்டதன் மூலம் அவர்களை விட உயர்ந்துவிட்ட மனநிறைவில் சலனமில்லாமல் அவர்களைக் கடந்துகொண்டிருந்தாள் அருணா.

# இம்மாத ரத்தினம்



செப்டம்பர் மாதத்தில் பிறந்தவர்களுக்குரியது நீலக்கல் என்று சொல்வார்கள். இது, பலவகையான நீல வண்ணங்களில் இருக்கும். ரத்தினங்களின் கடினத்தன்மையை மோஸ் அளவில் மதிப்பிடுவார்கள். இதன் கடினத்தன்மை 9. நீலக்கல், அமைதியைக் குறிக்கும். உண்மை, நீதி, விசுவாசம் ஆகியவற்றையும் குறிக்கும்.

மன அமைதி நிறைந்த ஓய்வுகாலத்திற்கு இந்தியன் பாங்க் உதவுகிறது






1. ஜானவாசம் வைத்தால்தான்
பிள்ளை வீட்டாரைத் திருப்திப்படுத்த,
எடுத்துவிட்டு ஜானவாசம் நடத்தலா
2. சீர் முறுக்கு, சம்பந்தி வீட்
தாகச் செய்யலாம். ஆனால் ஒரே ஒரு
3. காசி யாத்திரைக்கான குடை,
பிள்ளையையே அவருக்குத் தகுந்தமாதிரி
'பில்'லைக் காட்டும்போதெல்லாம், 'இ
தந்துவிட்டால் போச்சு!' என்று இந்த
பல்லைக் காட்டிச் சொல்லவும். அப்பு
4. பிள்ளை வீட்டாரைத் திருப்தி
வரச்சொல்லி இஷ்டத்துக்குப் படம் எ
(பிலிம் மட்டும் போட வேண்டாம் என்
பளிச் பளிச்சென்று பிளாஷ் மட்டும்
5. பந்தியில் எல்லோரும் சாப்பி
எல்லாவற்றையும் பரிமாறிவிட வேண்
சாம்பார் வந்தபிறகு நிறைய்ய்ய இ
ரசம், பாயசம் எல்லாம் 'இதோ வருகி
என்று இடையிடையே சொல்லிக் கொ
6. மாலை வரவேற்பின்போது, க
வைக்க வேண்டாம். பிள்ளை வீட்டா
மேடையேற்றிவிட்டு, கல்யாணத்தில் க
எடுத்துச் சொல்லச் செய்தால் கச்சே
7. தாம்பூலப் பையில் போடும் சா
வேண்டுமானால், நாலு பையன்களை வை
தாம்பூலப் பையைப் பாதி நிரப்பி, நூல
8. நாத்தனார்களைக் குளிப்பாட்டு
சோப்பும் கையுமாக நிற்கச் சொல்லவு

விலைவாசிகள் உயர்கிற
பெற்றவர்களுக்குக் கருணை





# கல்யாணச் செலவைக் குறைக்க சி

ற்று என்று அடம் பிடிக்கும்
ட்டோ ரிக்‌ஷாவில் கூண்டை

சொல்கிற அளவுக்குப் பெரி
மட்டும் செய்தால் போதும்.
க்தடி, செருப்பு எல்லாம்
ங்கிக்கொள்ளச் சொல்லலாம்.
ரிசப்ஷன் ஆனதும்
திலிருந்து அந்தக் காதுவரை
இரக்கப்பட்டு விட்டுவிடுவார்.
ந்த போட்டோகிராபரை
ச் சொல்லுங்கள்.
ன்கூட்டியே சொல்லிவிடவும்)
ந்தால் போதும்.
ட்கார்ந்த பிறகு, அடுத்தடுத்து
என்பதில்லை.
வெளி விட்டு, மோர் தான்!
... இதோ வருகிறது...'
ருந்தாலே போதும்.
ரி, லைட் மியூசிக் என்று எதுவும்
சேர்ந்த பெண்மணிகளையே
குறைகளை ஒவ்வொன்றாக
தாற்றுப் போகும்!
க்குடிச்செலவை மிச்சம் பண்ண
வாயால் காற்றை ஊதி,
இறுகக் கட்டிவிடவும்.
ற்கு என்றே வேலைக்காரிகளைச்
சாம்பின் சோப்பு போதும்)

த்தைப் பார்த்து, பெண்ணைப்
டு யோசனைகள் வழங்கியவர்:
ாருகேசி. படங்கள்: நடனம்













# யோசனைகள்!

# நீயா?



சந்திரநாத்

## 15

ஜில்லென்று குளிர் பானத்துக்கு ஆர்டர் கொடுத்துவிட்டு, மகேஷுக்காக அவன் அறையில் காத்திருந்தார் இன்ஸ்பெக்டர் கோபாலன்.

கங்குலி வியர்வையைத் துடைத்துக் கொண்டு, கைக் கடிகாரத்தைத் திரும்பத் திரும்பப் பார்த்தார்.

மேஜை மீது ஒரு சிறு துண்டுக் கடிதம், ''வெயிட் ஃபார் மீ — எட்டு மணிக்கு வந்து விடுகிறேன்'' என்று திரும்பத் திரும்பச் சொல்லிற்று.

''எட்டாகப் போவுதே'' என்றார் கங்குலி.

''இன்னும் இரண்டு நிமிஷம் இருக்கு'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''என்னை எதுக்கு வரச் சொன்னீங்க? நான் எட்டு மணிக்கு பார் தொறக்கப் போகணும் சார்.''

''அந்தக் கஷ்டமெல்லாம் இனிமே உங்களுக்கு இருக்காது. வேறே யாராவது வந்து தெனமும் தொறப்பாங்க.''

''ஸார்....'' — எழுந்தார் பதறிக் கொண்டு.

''அட, கம்மா உட்காருய்யா... நீதான்யா ராமுவை ஏவி, கமல், நிம்மி இரண்டு பேரையும் குளோஸ் பண்ணச் சொல்லியிருக்கே.''

''சாமி, சாமி... இது அநியாயம்.''

''முன்னாலேயே பிடிச்சுப் போட்டிருப் பேன்யா... மகேஷ் வரப்போ, ''பாருய்யா உனக்கு முன்னாடி 'கல்பிரிட்'டை நான் பிடிச் சுட்டேன்னு சொல்ல நினைச்சேன்ய்யா—''

கங்குலி முகம் வெளுத்தது.

''போலீஸ்னா கையாலாகாத பயலுகன்னு நினைச்சுருக்கான்யா அவன்... உன்னைத் தேடிக் கிட்டுத்தான் போயிருக்கான்... நான் அவனுக்கு முன்னால் உன்னை என்கிட்டே தருவிச்சுட்டேன்...''

இன்ஸ்பெக்டர் எழுந்து மீசையை முறுக்கி விட்டுக் கொண்டார்.

களைத்துச் சோர்ந்து உள்ளே நுழைந்து, ''ஹலோ'' சொல்லி, நாற்காலியில் விழுந்தான் மகேஷ்.

''வாய்யா டிடெக்டிவ்'' என்று உற்சாகமாக வரவேற்றார் இன்ஸ்பெக்டர். ''நீ விட்ட கொலைகாரனை நான் புடிச்சுட்டேன்— இதோ பாரு'' — கங்குலியைக் காட்டி 'வி' என்று விரலைத் தூக்கிப் புன்னகைத்தார்.

''என்ன மிஸ்டர் கங்குலி! ஜெயிலுக்குப் போறீங்களா?'' என்று மகேஷ் கேட்டுக் கொண்டே ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்றவைத்துக் கொண்டான்.

''சாமி, சாமி... நான் ஒரு பாவமும் அறியேன்'' என்று பதறினார் கங்குலி.

''ஆல்ரைட் மகேஷ். எனக்கு டைம் இல்லே. உன்கிட்ட ஒரு வார்த்தை சொல் லிட்டுக் குற்றவாளியைப் பிடிச்சுட்டுப் போகத்தான் காத்திருந்தேன். நான் வரட்டுமா? 307, இந்த ஆளை அரெஸ்ட் செய்.''

''நில்லுங்க கோபாலன்'' என்றான் மகேஷ். ''ஒரு சின்ன — பட் சுவாரஸ்யமான கதை சொல்றேன், கேட்டுட்டுப் போங்க.''

''அட போய்யா — கதை யெல்லாம் கேட்க எனக்கு நேரமில்லே.''

''கோர்ட்லே கேட்பாங்களே — கங்குலி யோட வக்கீல் அம்பு அம்பா விடுவாரே— 'ஏன் ஸார், கமல்நாத் சாகும்போது 'படுக்கையில மல்லாக்கா இல்லே கிடந்திருக்காரு—விரோதமான ஒரு ஆளு உள்ளே வந்திருந்தா பெரிய சண்டையா ஆகி, ஆள் குத்தப்பட்டுத் தரையிலே கிடந்திருக்கணும். குத்திட்டுத் தூக்கிப் போட்டான்னு கூட தரையிலேயும் அப்ப ரத்தம் இருக்கணுமே!ன்னெல்லாம் கேட்பாரே! தவிர, அத்தனை மோட்டா கமலை இந்தச் சோனி கங்குலி தூக்கிப் படுக்கையில போட்டிருக்கவே முடியாது, மிஸ்டர் இன்ஸ்பெக்டர்!''

''என்னப்பா சட்புட்டுன்னு கேஸை முடிச் சுடலாம்னு பார்த்தா....''

''கேஸ் எப்பவோ முடிஞ்சு போச்சு இன்ஸ் பெக்டர் — கமல்நாத்தைக் கொன்ன குற்றவாளியை நான் எப்பவோ பிடிச்சு போலீஸ்ல குடுத்திட்டேன். — இனிமே எல்லாத்தையும் கோர்வைப்படுத்திப் பார்க்க வேண்டியது தான் பாக்கி.''

''கமலைக் கொன்னவனைப் போலீஸ்லே புடிச்சுக் குடுத்திட்டியா? என்னய்யா சொல்றே — யார் அது? எங்கே, எந்த ஸ்டேஷன்லே இருக்கான், அவன், இப்போ?''

''எர்ஸ்கின் ஆஸ்பத்திரிலே, சவக் கிடங்கிலே.''

''மகேஷ் — யூ மீன், ராமு?''

''நோ மிஸ்டர் இன்ஸ்பெக்டர். கமலைக் கொன்றது நெய்தர் ராமு — நார் கங்குலி-பட் புவர் கேர்ள் நிம்மி.''

''மகேஷ்!'' — துள்ளிக் குதித்தார் கோபாலன்.

''எஸ், இன்ஸ்பெக்டர். கமலைக் கொன்றது அவருக்குத் தீயும் வைச்சது நிம்மிதான். இந்த விஷயம் முழுவதற்கும் ஆரம்பத்திலிருந்து கடைசி வரை அவள்தான் காரணம். கமலுக்கு அவள் வெறும் காரியதரிசி மட்டுமில்லே — 'கீப்' ஆல்ஸோ — அவங்களுக்குள்ளே வேறே தொடர்பு நிச்சயமா இருந்திருக்கு. அவள்தான் எங்களை மெட்ராஸ்லேருந்து நாங்க வந்த அதே வண்டியிலே தொடர்ந்து வந்திருக்கிறாள். அவளையின்றி வேறே யார் அந்த நடு நிசியிலே வந்திருந்தாலும் கமல்நாத் என்னைக் கூப்பிடாமல் கதவைத் திறக்கவே மாட்டார். — ரெண்டு அறைக்கும் போன் இருக்கு. ஜன்னல் வழியாப் பார்த்து நிம்மின்னு தெரிஞ்சதும் உள்ளே கூப்பிட்டுக்கிட்டுக் கதவைச் சாத்திக் கொண்டிருக்கிறார். வந்தது நிம்மிதான்ங்கறதுக்கு எவிடென்ஸ் இருக்கு.''

சிகரெட் சாம்பலை ட்ரேயில் தட்டிவிட்டு, ஒரு பஃப் இழுத்துக் கொண்டு, மேலே சொன்னான் மகேஷ்.

''கமல் படுக்கையிலே மல்லாந்து செத்துக் கிடந்திருந்தார். அப்படிக் கிடக்க வேண்டுமானால், அப்படிப்பட்ட நிலையில் யாராவது அவரை வைத்துக் கொண்டிருந்து குடிக்க வைத்து, அப்போது எதிர்பாராத விதமாகக் கத்தியை அவர் மார்பில் செலுத்தியிருக்க வேண்டும். படுக்கையில் ஒரு மனுஷன் தன் காதலியுடன் தவிர வேறு யாருடன் அந்த நிலையில் இருந்திருக்க முடியும்?... இரண்டாவது, ராமுவோ, கங்குலியோ வந்திருந்தால் உள்ளே ஒரு சண்டையே நடந்து, சாமான்களெல்லாம் இறைந்திருக்கும். இந்தக் கேஸில் எல்லாம் வைத்தது வைத்தது போல் இருக்கின்றன. தவிர, படுக்கையில் சுகமாகச் சாய்ந்த நிலையில் கமல் கத்திக்கு மார்பைக் காட்டியிருக்கவும் மாட்டார். குறைந்த பட்சம் சத்தமாவது போட்டிருப்பார். ஆகவே அவருக்கு ஏற்கனவே ரொம்ப அந்தரங்கமாகப் பழகி, இன்பமூட்டிய ஒரு பெண்தான் இப்போதும் வந்து(வந்ததற்கு ஏதோ பொய்க் காரணம் சொல்லி ஏற்க வைத்து) படுக்கைக்கு இட்டுச் சென்று இன்பமூட்டுகிறாற் போல் நடித்து, அவர் அந்த மயக்கத்தில் இருந்த போது குளோஸ் செய்திருக்கிறாள் — அது நிம்மியைத் தவிர வேறு யாருமில்லை.''

''அவள் ஏன் அவரைக் கொல்ல வேண்டும்?''

''நியாயமான கேள்வி. எல்லாம் பணத்துக்காகத்தான். கமல் இடுப்பில் கட்டியிருந்த லட்ச ரூபாய் நோட்டுக்களை அபகரிக்கத்தான்.''

''பணத்துக்காகக் கொலை செய்திருந்தால் அதை எடுத்துச் சென்றிருப்பது அல்லவா நியாயம்? — பணத்தை விட்டுச் சென்றிருக்கிறாளே — அத்தனையும் கற்றை கற்றையாக எரிந்து சாம்பலாகியிருக்கிறதே!''

''எரிந்தவை கற்றைகள்தான். ஆனால் அவை எல்லாம் ஆயிரம் ரூபாய் நோட்டுக்களாகத்தான் இருக்க வேண்டும் என்பது என்ன கட்டாயம்? சில நோட்டுக்களை மேலே வைத்துவிட்டுச்சில வெற்றுக் காகிதக் கட்டுக்களை வைத்துவிட்டு, உண்மைப் பணத்தை எடுத்துக் கொண்டு போயிருக்கக் கூடாதா?''

''ஐ ஸீ'' என்றார் இன்ஸ்பெக்டர்.

''அதுதான் நடந்தது இன்ஸ்பெக்டர். வந்தது நிம்மிதான்; தந்திரமாக சரசமாடிக் கொன்றாள். பிறகு பெல்டில் சில நூறு ரூபாய்



கலை மட்டும் வைத்துவிட்டு மிச்சத்தை எடுத்துக் கொண்டு, 'பாடி'க்குத் தீயிட்டு விட்டாள். பணம் முழுவதும் எரிந்துவிட்டது என்றுல்தான் பணத்தை போலீஸ் தேடாது என்பது அவள் திட்டம்.''

''கங்குலியை ஏமாற்றுவதற்காக வேறு ஒருவனை வரச் சொல்லி அவனைக் கொன்று தீயிட்டு விட்டுக் கமலை தலைமறைவாகி யிருந்தால்—''

''அப்படி ஒரு சந்தேகம் எனக்கும் வந்தது. ஆனால் அப்படி இராது என்பதற்குச் சாட்சியம் கிடைத்தது. நாங்கள் மதுரை வந்ததும் ''டபிள் ரூம் இருக்கா'' என்றுதான் கமல் கேட்டார். அன்றிரவு ஏதாவது நாடகமாடுவது அவர் நோக்கமாக இருந்தால், அப்படிக் கேட்டிருக்க மாட்டார்.''

''கூல்''ஸ் வந்தது. தலைக்கு ஒன்று எடுத்துக் கொண்டார்கள்.

''இதில் ராமுவின் பங்கு என்ன? அவன் ஏன் உன்னைக் கொல்ல முயன்றான்; நிம்மியை ஏன் கொன்றான்?''

''ராமு நிம்மியின் பழைய காதலன். இரண்டுபேருக்குமேமெட்ராஸ்தான். கொஞ்ச நாள் மதுரையில் இருந்தான். அப்போது கங்குலிக்கு அறிமுகமானான். நம்பிக்கையாக நடந்து கொண்டான். கங்குலி, எல்லாரிடமும் 'ஒரு பயல்' தன்னை ஏமாற்றிவிட்டதைச் சொல்லிக் கொண்டிருந்தது போலவே இவனிடமும் சொன்னார். கமலின் படத்தைக் காட்டியிருக்கலாம்.''

''ஆமாம், காட்டினேன்'' என்றார் கங்குலி.

''பிறகு ராமு பட்டணம் போனான். பழைய காதலி நிம்மியைத் தேடிப் போனபோது, எதிர்பாராத விதமாக அவள் தான் தேடும் கமலிடமே பி.ஏ.வாக இருப்பதாக அறிந்தான். இந்த நிம்மி ஒரு மட்டமான பெண். பணத்துக்காக எதையும் செய்யக் கூடியவள். ராமு ஒரு திட்டம் போட்டான். நிம்மி கமலை மயக்கித் தன் வசப்படுத்த வேண்டியது. கங்குலிக்குத் தகவல் கொடுத்துப் பெருந்தொகையுடன் கமலை மதுரைக்குத் தருவிப்பது. நிம்மியும் கூடவே வந்து, இப்போது செய்தது போல் கமலைத் தீர்த்துக் கட்டிவிட்டுப் பணத்துடன் வந்துவிடுவது—நிம்மி இதற்கு ஒப்புக்கொண்டாள். ராமு திரும்பி மதுரைக்கு வந்தான். ஒரு வாரம் கழித்து மெதுவாகக் கங்குலியிடம் கமலின் இருப்பிடத்தைச் சொன்னான் — சொன்னானா மிஸ்டர்?''

''சொன்னான்'' என்றார் கங்குலி.

''கங்குலி டெலிபோனில் கமலைப் பிடித்து மிரட்டினார். சரியாகப்பதில் சொல்லவில்லை!''

''ஆமாம்.''

''ஆகவே ராமுவை மீண்டும் மதராசுக்கு அனுப்பினார். இந்தத் தடவை பணத்துடன் வருவதாகக் கமல் ஒப்புக் கொண்டார். ராமு உடனே மதுரை திரும்பவில்லை. கமல் யாரையாவது பாதுகாப்பாக அழைத்து வந்துவிட்டால் காரியம் கெட்டுவிடுமே என்ற பயம் அவனுக்கு இருந்தது. புறப்படும் நாள் வரையில் கமலின் நடமாட்டங்களை நெருக்கமாக இருவரும் கண்காணித்தார்கள். கமல்நாத் என்னை அமர்த்திக் கொள்ளப் போவது தெரிந்ததும் என்னைக் கிளம்ப முடியாமல் செய்வதில் இறங்கி, என் மனைவியை பயமுறுத்தி, என் ஆபீஸ் காரியதரிசி நீலாவை ஒளித்து வைத்து, பிற்பகல் வரை போக்குக் காட்டினார்கள். அப்போதும் கமலுடன் நான் கிளம்புவது இழுபறியாக இருக்கவே, முன்னதாகவே ராமு கிளம்ப வேண்டியிருந்ததால் — கமல் மட்டும் கிளம்பினால் 'அக்பருக்கு ஜே' என்றும் கூட ஒருவரும் கிளம்பினால் 'அக்பருக்கு ஜே ஜே என்றும் தந்தி அடிக்கும்படி ஏற்பாடு' செய்துவிட்டு வந்து விட்டான். அதன்படியே நிம்மி நாங்கள் கிளம்பினதும் தந்தி அடித்தாள். இருவர் வருவதைத்தெரிந்துகொண்ட ராமு ஹோட்டல்நிர்மலாவில்ஆபீஸ் கிளார்க்கிடம் ஸிங்கிள் அறைதான் இருக்கிறது என்று சொல்லச் செய்து, எங்களைப் பிரித்து வைத்தான். அந்தக் கிளார்க்கைப் பிடித்து மிரட்டி உண்மையைத் தெரிந்து கொள்ளத்தான் சற்று முன் போனேன். நடேஷ் தந்தி விஷயத்தைப் 'பின்தொடர்ந்து' நிம்மி சொல்படி நிம்மியின் அம்மா கமலா கொடுத்தது என்பதைக் கண்டு பிடித்தார்.''

''எல்லாம்தான் ராமு — நிம்மி திட்டப்படி நடந்ததே, பின் ஏன் ராமு அவளைக் கொல்ல வேண்டும்?''

''அங்கேதான் விதி திசை திருப்பிவிட்டது. நிம்மி மறுநாள் சென்னை போய்விடுவதாகத் தான் இருந்தாள். கொலை செய்து பணத்தை அபகரித்த பின் நிம்மிக்கு ஒரு சந்தேகம் வந்துவிட்டது. 'கமல் தன்னைப் பற்றி ஏதாவது என்னிடம் பேசியிருப்பாரோ?' என்று. கங்குலி மீது சந்தேகத்தைத் திருப்பி விட நினைத்து, என்னைப் பார்க்க வந்தாள். இது ராமுவுக்குத் தெரியாது. நிம்மி ராமுவிடம் பணத்தைக் கொடுக்கவுமில்லை. அவள் என்னைப் பார்க்க வந்ததைக் கவனித்துக் கொண்டிருந்த ராமுவுக்கு அவள் மீதே சந்தேகம்

''குதிரை — ஏற்றம் பழக ஒரு சுலபமான வழி என்ன? சொல், பார்க்கலாம்?''

''முதலில் யானை - ஏற்றம் பழகிவிட்டுப் பிறகு குதிரை-ஏற்றம் பழகுவது...!''

- பெ. கலாசாமி



வந்துவிட்டது. தன்னைக் காட்டிக் கொடுக்கத்தான் பார்க்கிறானோ என்று — அதனால்தான் அவன் என்னுடன் பேசிக் கொண்டிருக்கும்போது, அவனைச் சுட்டான். ஆனால் குறி தப்பிவிட்டது. இரண்டாவது தடவை ஆஸ்பத்திரியிலிருந்து தப்பி வந்து பழி தீர்த்துக் கொண்டான்.''

''பிரமாதம் பிள்ளாய்—'' இன்ஸ்பெக்டர் எழுந்து வந்து மகேஷைத் தழுவிக் கொண்டார். கை குலுக்கினார்.

''உன் கம்பெனி எம்ளம் என்ன? கான்ஸரா, நண்டா? துருவிவிட்டாய்; துருவி—ஒண்டர்ஃபுல்! வி ஃபார் கான்ஸர்!'' என்றார்.

''ஒன் மினிட் இன்ஸ்பெக்டர்! இன்னும் ஒரு விஷயம் பாக்கி இருக்கிறது. நிம்மி பறித்துக்கொண்ட பணம். அதைக் கண்டு பிடிக்க வேண்டாமா?'' என்றான் மகேஷ்.

''ஓ—ஆமாம். எங்கே இருக்கிறது அது?''

மகேஷ், ஒரு நாலாக மடித்த காகிதத்தை எடுத்துக் கொடுத்தான். ''இந்தாருங்கள் இன்ஸ்பெக்டர், இது மதுரை ஸ்டேஷன் 'குளோக் ரூம் ரசீது. அங்கே நிம்மியின் பெட்டி இருக்கிறது. அதில்தான் முழுப் பணமும் இருக்கும் — போய் எடுத்துக்கொள்ளுங்கள்.''

''என்னைக் காப்பாத்திட்டீங்க ஸார்'' — கங்குலி ஓடிவந்து கையைப் பிடித்துக்கொண்டு கண்ணீர் பெருக்கினார்.

''நீங்க இந்தப் பணத்தைக் கிளெய்ம் பண்ண முடியாது மிஸ்டர் கங்குலி'' என்றான் மகேஷ்.

''அந்தச் சனியன் எனக்கு வேண்டவே வேண்டாம். தூக்கு மேடைக்குப் போகாமே தப்பிச்சேனே, அதுவே போதும்'' என்றார் அவர்.

''ஆல் ரைட், பிரெண்ட்ஸ்'' எழுந்தான் மகேஷ். ''நான் அடுத்த பிளேனில் மெட்ராஸ் போக வேண்டும். நண்டு வளைக்குத் திரும்புகிறது. எனக்கு ஹோம் சிக்னஸ் வந்து விட்டது! (என் நீலாக் கண்ணைப் பார்க்க வேண்டும்) — ஷல் ஐ டேக் லீவ் — (என்ன அக்கிரமம்! மஞ்சுவைப் பார்க்க வேண்டும் என்று தோன்றவில்லை — நீலாவைப் பார்க்க வேண்டுமாம்!)

மகேஷ் திருப்தியுடன் ஹோட்டலை விட்டு வெளியே வந்தான். (முற்றும்)

# அடுத்த பட்ஜெட்டும் ஆர்.வியும்

கேள்வி: திரு ஆர். வெங்கட்ராமன் நிதியமைச்சராகப் பதவி ஏற்று ஒன்றரை ஆண்டுகள்தான் ஆகின்றன. இதற்குள் அவர் அடுத்த பட்ஜெட்டைத் தாம் சமர்ப்பிப்போம் என்ற நம்பிக்கையே இல்லாத மாதிரி பேசுகிறார். நிதி அமைச்சர்கள் அடிக்கடி மாற்றப்பட்டால் அவர்கள் நாட்டின் நிலைமைகளைப் புரிந்து கொண்டு பொருளாதாரத் திட்டங்களை நிறைவேற்ற முடியுமா?

பொருளாதார நிபுணர் டாக்டர் சி.வி. சூரியன் பதிலளிக்கிறார்:

''நாட்டின் பொருளாதார நிலைமையைப் புரிந்துகொள்ள ஒரு நிதியமைச்சருக்கு இத்தனை காலம் அவகாசம் கண்டிப்பாக வேண்டும் என்று இல்லை. பதவிக்கு வருகின்ற மனிதர்களின் புத்திசாலித்தனத்தைப் பொறுத்தது அது. ஆர். வி.யைப் பொறுத்தவரை முதலில் அவருக்கு நிதியமைச்சர் பதவியுடன் தொழில் மந்திரி பதவியும் கூடுதலாகக் கொடுக்கப்பட்டது. அதனால் முதல் சில மாதங்களுக்கு அவரால் சரியானபடி பொருளாதார விஷயங்களில்' அக்கறை காட்ட முடியாமல் போனது. அதற்கப்புறம் அவர் அறிவித்த 'பேரர் பாண்ட்' திட்டம் பணக்காரர்களின் நன்மைக்காகவே கொண்டுவந்த திட்டம். கறுப்புப் பணத்தை ஒழிக்க இது வல்ல வழி. ''பணக்காரர்களே தயவுசெய்து உங்கள் கறுப்புப் பணத்தை அரசிடம் முதலீடு செய்யுங்கள்'' என்று அரசு கெஞ்சுவது அவமானப்பட வேண்டிய விஷயம். அதற்கப்புறம் அவர் அறிவித்த திட்டங்கள் இரண்டும் எந்த வகையிலும் பண வீக்கத்தைக் கட்டுப்படுத்தவோ, அவசியப் பொருள்களின் விலைகளைக் குறைக்கவோ இல்லை. சுதந்திரம் பெற்றதிலிருந்து இதுவரை அறிவிக்கப்பட்ட பொருளாதாரத் திட்டங்கள் அவ்வளவுமே பணக்காரர்களை மேலும் பணக்காரர்கள் ஆக்கி விட்டனவே தவிர, சாமான்ய மக்களுக்கு ஒன்றும் உதவவில்லை.



ஆர். வெங்கட்ராமன்

ஒரு புதிய பொருளாதாரத் திட்டம் அமல்படுத்தப்படுகிறதென்றால் அதற்கு நிதியமைச்சர் மட்டும் காரணமல்ல. முழு மந்திரி சபையும் ஆலோசித்து, கட்சிக் கொள்கைக்கு ஏற்பத்தான் திட்டங்கள் தயாரிக்கப்பட்டு, அறிவிக்கப்படுகின்றன. திட்டம் தோல்வியுற்றால் ஒரு தனி நபரை மட்டுமே காரணமாக்க முடியாது. எனவே பொதுவாக நோக்கும்போது அடிக்கடி நிதியமைச்சர்களை மாற்றுவது சரியல்ல என்றே நான் கருதுகிறேன்.

டாக்டர் சி.வி. சூரியன்



பேட்டி: ப்ரியன்




கொசுக்களைத் 'தலை தெறிக்க' ஓட்டிடும் டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்.




நல்லதைச் செய்வீர்............வாங்குவீர் டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்




கொசுத் தடை இன்ஷூரன்ஸ் டார்டாய்ஸ் கொசு வர்த்திச் சுருள்

கொளுத்துவீர் டார்டாய்ஸ்-விரட்டுவீர் கொசுக்களை!

**டார்டாய்ஸ்** கொசு வர்த்திச் சுருளினால்.



தயாரிப்பாளர்:
பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
.:.போர்ட், பம்பாய்-400 023. .:.போன்: 273831



# குறுக்கு வழி

'ஜெரா'

மெல்லிய இரவு விளக்கு எரிந்து கொண்டிருந்த அந்த ஆடம்பரமான படுக்கையறையில் அவன் பொறுமை யின்றி அலைந்து கொண்டிருந்தான். எந்த நிலையிலும் ஒளிந்து கொள்ளத் தயாராய் இருப்பவன் போல் ஏதோ ஓர் எச்சரிக்கை உணர்வு அவன் முகத்தில் தெரிந்தது. அவன் யாரை எதிர் பார்த்து நெடுநேரமாக அந்த அறைக்குள் பதுங்கி யிருக்கிறானோ அந்த நபர் இன்னும் வந்தபாடில்லை. ஏதாவது மீட்டிங்காய் இருக்கும். இல்லை ஏதாவது தேவையில்லாத திறப்பு விழாவாய் இருக்கும்... அவன் ஏதோ வாய் விட்டு முணகிச் சலித்துக்கொண்டவனாக நிதானமாக எதிரே இருந்த ஃபோம் மெத்தையில் அமர்ந்தான். கை எட்டும் தூரத்தில் இருந்த டெலிபோன், தண்ணீர் கூஜா, தூக்க மாத்திரைப் பாட்டில், நீர் நிரம்பிய டம்ளர், இவைகளை நோட்டமிட்டபடி கொஞ்ச நேரம் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். திடீரென்று யாரோ வரும் சப்தம் கேட்கவே விருட்டென்று எழுந்து அருகிலிருந்த பீரோவுக்குப் பின்னால் பதுங்கினான். சற்று நேரத்தில் அந்த அறைக்குள் நுழையும் ஐம்பது வயது மதிக்கத் தக்க பெரிய மனிதரைப் பார்த்ததும் அவன் பற்கள் நறநறத்தன. கைகள் அவன் கட்டுப் பாட்டையும் மீறி பாக்கெட்டிலிருந்த பிச்சுவாவைப் பற்றிக் கொண்டன. கதவை உட்புறமாகத் தாழிட்டுவிட்டு, விளக்கைப் போட்ட அந்தப் பெரிய மனிதர், சட்டையைக் கழற்றி மாட்டிவிட்டு, ஸ்வாமி படத்தைப் பார்த்துக் கரம் கூப்பி, கண்மூடி, சற்று நேரம் தியானித்தார். அவர் கண் திறக்கும் போது, அவன் நீட்டிய பிச்சுவாவுடன் எதிரில் நிற்கவே பயத்தால் குரல் வராமல் தடுமாறித் தவித்தார். அவன் பாய்ந்து சென்று அவர் கரத்தில் பிச்சுவாவை நெருடவிட்டுக் கரகரப்பான குரலில் எச்சரித்தான்.

''சத்தம் போடாதே! மீறினா அதுவே உன் கடைசிச் சத்தமா இருக்கும்.'' முகத்தில் பலநாள் ரோம வளர்ச்சியோடு பரிதாபமாகத் தோற்றமளித்த அவனைப் பார்த்ததும் பெரிய மனிதரின் கண்களில் இரக்கம் வழிந்தது. தைரியத்தை வரவழைத்துக் கொண்டு மெல்ல அவனைவிட்டு விலகினார்... பரிவோடு அவனைப் பார்த்தார்.

''யாருப்பா நீ?''

''நீதானே அரசியல் தலைவன் அன்பரசு?''

''ஆ....ஆமா.''

''பாவம் உனக்கு அற்பாயுசு.''

''நீ என்ன சொல்றே?''

''தெரியலே?'' — அவன் இடிஇடியெனச் சிரித்தான். பிறகு சட்டென்று சிரிப்பை நிறுத்திவிட்டு சீரியஸாக அன்பரசுவை ஒரு முறை பார்வையால் அளந்தான். ''உன்னை மேலே அனுப்ப டிக்கட் ரிசர்வ் பண்ணியாச்சு எதிலே போறே — பாசஞ்சரா, எக்ஸ்பிரஸா — எப்படி வசதி?''

''நீ யாருனு....?''

''என் பேரு சுபாஷ்'' — அவன் தன் பெயரைச் சொன்னதும் அன்பரசு இகழ்ச்சியாகப் புன்னகைத்தார்.




அக்டோபர் 81

# ★ மூங்கிற்காட்டுக் குழலோசை

குறுநாவல்:

**உஷா சுப்பிரமணியம்**

''ம்.... ஒரு தலைவனோட பேரு...''

''வேண்டாம்— தலைவனோட தலையெழுத்தெல்லாம் இப்பத்தலை கீழா இருக்கு. என்னைச் சாதாரண மனுஷன்னே சொல்லு.''

''உன்னைப் பார்த்தா புத்திசாலியா தெரியுது.''

''ம்— கையிலே கத்தி வச்சிருக்கேனில்லே! உன் கண்ணுக்கு அப்படித்தான் தெரியும்.''

''சுபாஷ் — இதோ பாருப்பா — நீ யாரு— எதுக்காக என்னைத் தொந்தரவு பண்றே? நான் தெரிஞ்சுக்கலாமா?''

சுபாஷ் ஆக்ரோஷமாக உறுமினான்..... ''எனக்குத் தேவை உன் உயிர்.''

ஒரு கணம் மார்புத் துடிப்பு நின்றுவிட மரமாகிப்போன அன்பரசு அடுத்த கணமே தன்னைச் சமாளித்துக் கொண்டு மெத்தையில் அமர்ந்தார்.

''ஸோ, நீ இப்ப என்னைக் கொலை பண்ணணும் இல்லையா?''

''யெஸ்.''

''சரி, முதல்லே அப்படி உட்கார் — அட பரவாயில்லை உட்காருப்பா — பாவம் ரொம்ப சோர்ந்து போயிருக்கே — ஏதாவது பழம் சாப்பிடறயா?''

''பழக்கமில்லே.''

''கொலைசெஞ்சு மட்டும்பழக்கமிருக்கோ?''

''கத்துக்கணும்.''

''ஓ! அப்ரண்டீஸா? அப்போ உனக்குச் சம்பளம் கிடைக்காது — ஸ்டைஃபண்ட் தான் — எவ்வளவு குடுத்தாங்க?''

''அஞ்சாயிரம்.''

''அடேயப்பா — அனுபவமில்லாதவனுக்கு அஞ்சாயிரமா?''

''அனுபவம் தேவையில்லே — அன்பரசுவை அழிச்சுட்டாப் போதும்னு சொன்னாங்க.''

''அப்போ நீ இந்த பால், பழம், இதையெல்லாம் ஒருகை பார்த்துத்தான் ஆகணும். ஏன்னா — என் இதயமிருக்கே அது ஏழைகளோட வாழ்த்துக்களை வாங்கி வாங்கி வைரம் பாய்ஞ்சிருக்கு! வலுவா குத்தலேன்னா என் வாழ்க்கை முடியாது.''

''என் கத்திக்குத் தாகம் தணியற வரைக்கும் நான் கை நீளக்க மாட்டேன்.''

''என் வாழ்க்கையிலே எத்தனையோ ஏழைகளுக்குச் சோறு போட்டிருக்கேன். இப்ப உன் வயிறு காலியா இருக்கிறதை நான் அனுமதிக்கலாமா?''

''ம்— இந்தக் கனிவான உபசரிப்பு வெளியில் கிடைச்சிருந்தா நான் கத்தியைத் தூக்கி இருக்க மாட்டேன்.''

''உன் கதையைச் சொல்றியா?''

''இல்லே— என் கனவைச் சொல்றேன்.''

''புரியலே?''

''உனக்கு மட்டுமில்லே... உன்னைப் போல் பணத்துக்குப் பல்லைக் காட்டற பரதேசிகளுக்கு ஏழைகளோட பசியைப் பற்றிப் புரியாது.''

''விசித்திரமா இருக்குப்பா — என் உயிரை விலை பேசிப் பணத்தை வாங்கிட்டு என் மேலேயே பழி போடறியே...''

''பேசாதே — நான் பணத்தை வாங்கினது உன்னைப் போல் பங்களாவிலே வாழறதுக்காக இல்லே. வாழ முடியாத பத்துப் பேருக்கு வழி காட்டறதுக்காக.''

''உயரத்திலே இருந்தாத்தான்பா கீழே கிடக்கிறவங்க கஷ்டத்தை எல்லாம் கரெட்டாக் கண்டு பிடிக்க முடியும். நாங்க பங்களாவிலே இருந்தாலும் எங்க பார்வை என்னிக்குமே ஏழைகள் மேலேதான்.''

சுபாஷ் திடீரென ஆவேசம் வந்தவன் போல மேஜை மேல் ஓங்கிக் குத்தினான். கடந்த காலத்தின் கரைக்க முடியாத சோகச் சுமைகள் இதயத்தை அழுத்த ஏக்கப் பெருமூச்சு விட்டான்.

''உங்க மாதிரி அரசியல்வாதிங்க பார்வை பட்டதுனலதான் செழிப்பா இருந்த எத்தனையோ குடும்பங்கள் சிதைஞ்சு போச்சு.''

அன்பரசு ஆதரவாக அவன் தோளில் தட்டிக் கொடுத்தார். ''அவசரப்பட்டு யாரோ செய்துவிட்ட கொடுமைக்காக இந்த அப்பாவி அன்பரசுவைத் தண்டிக்கலாமா?''

சுபாஷ் கோபத்தால் பாதாதி கேசமும் நடுங்கக் கூறினான்: ''அவசரப்பட்டவங்க உன் அரசியலைச் சேர்ந்தவங்கதானே — சொந்தத் தொழில் தொடங்கலாம்னு எங்க சொத்தை அழிச்சாங்க — நல்ல வேலை வாங்கித் தர்ரதாச் சொல்லி என் பணத்தைப் பாழாக்கினாங்க— தங்கைன்னு சொல்லிக்கிட்டே எங்கக்காவைத் தாரமாக்கத் துடிச்சாங்க — தடுக்க வந்த எங்க மச்சானை....'' அதற்கு மேல் வார்த்தைகள் வரவிடாமல் துயரம் அவன் தொண்டையை அடைக்க ஒரேயடியாகத் துவண்டு தடுமாறினான். அன்பரசு அவனைச் சமீபித்து அவன் தோள்களைப் பற்றி அருகிலிருந்த நாற்காலியில் அமரச் செய்தார்.

''பரிதாபமாத்தான் இருக்கு. ஆனா கொடுமை செஞ்சவங்களைத் தேடிப் பிடிச்சுக் கொல்றதை விட்டுட்டு ஒரு பாவமும் அறியாத என்னைப் போய்....'' சுபாஷ் மெதுவாக எழுந்து அன்பரசுவை உற்றுப் பார்த்தான். வெறி வழியும் கண்களால் அவரை விழுங்கி ஜீரணித்தான். அருவெறுப்பான பொருள் ஒன்றைப் பார்ப்பது போல அவரைப் பார்த்து உதட்டை அஷ்டகோணலாக்கி உறுமினான். ''யோவ் சும்மா சொல்லக் கூடாதுய்யா. அன்பரசுன்னு

பேரு வச்சுக்கிட்டு ஊரை ஏமாத்தி அயோக்கித் தனம் பண்ணிக்கிட்டு இருக்கே! இல்லேன்னு ஐயாயிரம் ரூபாயைக்குடுத்து உன்னே அழிக்கிற அளவுக்கு எதிரிங்க இருப்பாங்களா?''

''அயோக்கியனுக்குத்தான் எதிரிங்க இருப்பாங்கன்னு இல்லே. ஆண்டவனுக்கே கூட எதிரிங்க இருக்காங்க — ஏன்? ஏசுநாதருக்கு எதிரிங்க இல்லையா?''

''போதும். நீ இவ்வளவு பேசினதே அதிகம். எங்க குடும்பத்தை அழிச்சிட்டு அடையாளம் தெரியாம ஓடிப்போனவங்களைத் தேடிப்போறதை விட அடையாளம் தெரிஞ்ச உன்னையே அழிக்கிறதுன்னு முடிவு பண்ணிட்டேன். தற்கொலைக்குத் தயாரா இருந்த என்னை உன் எதிரிங்க கொலை செய்யத் தூண்டினதும் சம்மதிச்சுட்டேன். சம்பளத்தை வாங்கி அதை விடுதிக்கு அன்பளிப்பாக் குடுத்திட்டேன். உன் எதிரிகளுக்கும் நிம்மதி எனக்கும் நிம்மதி!''

சுபாஷின் வார்த்தைகளைக் கேட்டதும் அன்பரசு கொஞ்ச நேரம் மௌன விரதம் மேற்கொண்டார். விழிகளை உயர்த்தி ''அறியாச் சிறுவனே!'' என்பது போல அனுதாபத்தோடு அவனைப் பார்த்தார். ''ரொம்பச் சந்தோஷம்பா — உனக்கு நிம்மதி வரும்னு நான் நிச்சயமாச் சாகத்தான் வேணும்—யெஸ்... நான் சாகத்தான் வேணும்...''— சோகம் ததும்பச் சொல்லிவிட்டு விரக்தியில் நனைத்த சிரிப்பை உதிர்த்தார். மெல்லப் படுக்கையில் அமர்ந்தவர் திடீரெனப் பாய்ந்து தலையணைக்குக் கீழிருக்கும் ரிவால்வரை எடுத்து சுபாஷின் நெஞ்சுக்குக் குறி வைத்தார். ''ஹாண்ட்ஸ் அப்! அசையாதே! இதிலே ஆறு குண்டும் அப்படியே இருக்கு. வேஸ்ட் பண்ண மாட்டேன்.''

சுபாஷ் கால்கள் நடுங்கக் கத்தியைக் கீழே போட்டுவிட்டுக் கைகளை மேலே உயர்த்தினன். உதடுகள் எதையோ சொல்லத் துடிக்க, விழிகள் ஊமை ஜாலங்கள் புரிய, அவனுடைய உடல் வியர்வையின் உற்பத்தி ஸ்தலமாயிற்று.

''சுபாஷ் ஏம்ப்பா நடுங்கறே? பயப்படாதே. நான் உன்னைக் கொல்ல மாட்டேன்.'' — சற்று யோசித்த அன்பரசு ரிவால்வரை மேஜை மேல் வைத்துவிட்டு அவனை ஏறிட்டுப் பார்த்தார். ''அடுத்தவங்க சாவு எனக்கு அல்வாத் துண்டு இல்லே!... கமான் வா, ரிவால்வரை எடுத்துக்கோ.'' சுபாஷுக்கும் ரிவால்வருக்கும் இடையே இருக்கும் சில அடிகள் தூரத்தில் ஓரடியை அவன் கால்கள் விழுங்கின. ''பயப்படாதே, வா. கூழாங் கற்களையே பார்த்த உன் கண்களுக்கு வைரத்தை அடையாளம் தெரியலே.'' மற்றும் ஓரடி காலடியில் மறைகிறது. ''அஞ்சு விரலும் ஒண்ணா இருக்குமா? கட்டை விரல் உன் கண்ணுலே பட்டதுக்காக நீ சுண்டு விரலைத் துண்டாக்க முடிவு பண்ணிட்டே— வா'' — மீண்டும் ஓரடி மாண்டு போகிறது. ''எவனோ சொன்னதுக்காக ஏழைகளுக்காக வாழுற என்னையே கொல்லப் போறே வா''. சுபாஷின் கை ரிவால்வரை எடுத்தது. ''ஏம்பா யோசிக்கிறே — சுடு!

''சந்தோஷமா என்னைச் சாகடி - நான் செத்த பின்னாலாவது நாலு பேர் கிட்டே நல்லா விசாரிச்சு என்னை நல்லவன்னு புரிஞ்சுக்கோ. உனக்கு நல்லதே நடக்கட்டும்—காட் ப்ளெஸ் யூ''. அன்பரசு நிம்மதியாக நெஞ்சை நிமிர்த்திக் கண்களை மூடி அமர்ந்தார். சுபாஷ் அவரையே பார்த்து நெஞ்சைப் படபடப்பாக்கிக் கொண்டான். தவித்தான்—தடுமாறினன் — குறி பார்த்தான்—யோசித்தான் — துப்பாக்கி நழுவ, கொஞ்சம் கொஞ்சமாக விம்மியபடி அன்பரசுவின் காலடியில் விழுந்தான். அன்பரசு திடுக்கிட்டுக் கண் விழித்து அவனைப் பார்த்துத் தம் விழிகளை விரித்தார். அன்போடு தூக்கி நிறுத்தி அவன் கண்களைத் துடைத்தார். ''ஐயா! என்னை மன்னிச்சுடுங்க — அழிக்க வந்தவன் கையிலேயே ஆயுதத்தைக் குடுக்கிற நீங்க

---

**கணவன்: விருந்தாளிகளைக் கிளப்பறதுக்கு நாம் உன் பாட்டிக்கு சீரியஸ்னு பொய்த் தந்தி கொடுக்கச் சொன்னது பெரிய தப்பாப் போச்சு!''**

**மனைவி: ''ஏன்?''**

**கணவன்: ''மூச்சு இருக்கும் போதே போய்ப் பாருங்கன்னு சொல்லி அவங்க நம்மைக் கிளப்பறாங்க!'' -அ. தெ.**



தெய்வம்..எந்தப்பொறுக்கியோ உங்களை...'' அன்பரசு மார்பில் அறைந்து கொண்டு அழும் சுபாஷைத் தம் மார்போடு சேர்த்துத் தழுவிக் கொண்டு தடவிக் கொடுத்தார். ''அழாதே சுபாஷ். சோதனைகள்தாம்பா மனுஷனைச் சுட்ட தங்கமா ஜொலிக்க வைக்குது— நான் துரோகியில்லேப்பா. சாதாரணத் தொண்டன். கண்ணைத் துடைச்சுக்கோ''— அவனை ஒரு வழியாகத் தேற்றி, கையில் கணிசமான அளவு பணம் கொடுத்து, அவன் வெளியே போவதற்கு அனுமதி கொடுத்தார் அன்பரசு. சுபாஷ் வெளியேற, அறை மூலையிலிருந்த ஜன்னலை அணுகினான். ''சுபாஷ்! திரும்பவும் ஏம்பா குறுக்கு

ஈஸி.. ஈஸி..!



**கணவன் : "1999ல் விலை ரொம்ப அதிகமாக இருக்கும்னு இப்பவே வாங்கியாந்துட்டேன் இந்த ஈஸிசேரை!"**

**மனைவி : "ஏன் எப்பவும் ரிட்டையராகப் போகிற வருஷத்தையே நினைச்சு மனசைப் போட்டுக் குழப்பிக்கிட்டிருக்கிங்க..?!"**

**— உ. ராஜாஜி**

வழிக்கே போறே? நேர் வழியிலே போப்பா— அப்பத்தான் நேர்மையைப் பார்க்கலாம்.'' அன்பரசுவின் அறவுரையால் மனம் நெகிழ்ந்து போய் மறுபடியும் கும்பிடு போட்டுவிட்டு அறைக் கதவைத் திறந்து கொண்டு வெளியேறினான் சுபாஷ். சற்று நேரம் நிதானித்த அன்பரசு திடீரென ஆவேசம் வந்தவராக எதிரிலிருக்கும் மோடாவை எட்டி உதைத்தார். கோபத்தால் கண்கள் சிவக்க, துடிக்கும் உதடுகளைக் கடித்துக் கொண்டு டெலிபோனை டயல் செய்தார். ''ஹலோ — யாரு — பி.ஏ.வா? ஏய்யா நீயெல்லாம் ஓசிச் சம்பளம் வாங்கவா வர்றே? பங்களா மெயின் கேட்ல இருக்கிற வாட்ச்மேன் எல்லாம் பாரா பாக்கறாங்க— இல்லே பராக்குப் பாக்கறாங்க? யாரோ ஒரு கேடிப் பய என் அறைக்குள்ளேயே ஒளிஞ்சிருந்து என்னைக் கொல்லப் பார்த்தான்... என் தந்திரத்தாலேயும், டம்மி தோட்டா ரிவால்வராலேயும் அவனைச் சமாளிச்சு மெயின் கேட் வழியா அனுப்பி யிருக்கேன். அவனுக்கு நாம செய்யற பித்தலாட்ட மெல்லாம் தெரிஞ்சிருக்கு. கேட்டைத் தாண்டறவரைக்கும் விட்டுட்டு, அப்புறமா அவனை வளைச்சு சதிகாரங்க யாருன்னு தெரிஞ்சுக் கிட்டு ஆளைத் தீர்த்துடுங்க.என்ன புரியுதா.'' பேசிக்கொண்டே நிமிர்ந்த அன்பரசு அறை வாசலில் கைகளைக் கட்டியபடி நின்றுகொண்டிருந்த சுபாஷைப் பார்த்துத் தடுமாறியபடி ரிஸீவரை வைத்தார்... ''நீ.... சுபாஷ்... நீ....'' குரல் நடுங்கக் குழறினார். சுபாஷ் இறுகிய முகத்தோடு அடிமேல் அடி வைத்து நெருங்க, அன்பரசு பயத்தால் உலர்ந்து போன நாக்கை நனைப்பதற்காக எதிரே இருந்த டம்ளரில் இருக்கும் நீரை எடுத்து மடமடவென்று குடித்தார். சுபாஷ் கூஜாவில் இருக்கும் தண்ணீரை அன்பரசு நீட்டிய காலி டம்ளரில் நிரப்பினான். சற்று யோசித்து அன்பரசு அதையும் குடித்துவிட்டு டம்ளரை மேஜை மேல் வைத்தார்.

''பயப்படாதே அன்பரசு... நான் உன்னைக் கொல்ல மாட்டேன். ஆனா நீ சாகப் போறே....''

''சு...சுபாஷ்... நீ என்ன சொல்றே!''

''நீ இப்பக் குடிச்சியே — அந்த ஒரு டம்ளர் தண்ணியிலே இருபத்தஞ்சு தூக்க மாத்திரைகளைக் கரைச்சு வச்சிருந்தேன். நீ இங்க வர்றதுக்கு முன்னாலே நான்தான் அதைத் தயாரிச்சு வச்சிருந்தேன் —.உன்னைக் கொன்னுட்டு நான் தற்கொலை பண்ணிக்கிறதுக்காகத்தான் அப்படிச் செஞ்சு வச்சிருந்தேன். உன்னுடைய அட்வைஸ் என்னை மாத்திடுச்சு. நீ நல்லவன்னு நம்பி இதைக் குடிக்க வேணாம்னு சொல்லத்தான் திரும்பி வந்தேன். அதுக்குள்ளே அவசரப்பட்டுட்டே.''

''சுபாஷ்!'' மரண பயத்தால் முகம் வெளுக்க ஓலமிட்ட அன்பரசு ''டாக்டர்... டாக்டருக்கு போன்....'' என்று முனகினார்.

''உஸ்... சத்தம் போடாதே! தைரியத்தோட சாகறதுதான் தலைவனுக்கு அழகு... குட் பை... நல்லாத் தூங்கு....ம் என்னை நேர் வழியிலே போகச் சொல்லிட்டு நீயே அதிலே நெருப்பையும் வச்சிட்டே— அதனாலே திரும்பவும் குறுக்கு வழியிலேயே போறேன் — குட் பை. ஸ்வீட் ட்ரீம்ஸ்.''

சுபாஷ் தான் முதலில் உள்ளே நுழைந்த ஜன்னல் வழியே வெளியேறி சன்ஷேடில் குதித்து ஜன்னலை மூடிவிட்டு நழுவினான். அன்பரசு தவித்து, தடுமாறி தலைசாயக் கீழே விழுந்தார். பங்களாவின் பின்புற வழியாக மதில் சுவரைத் தாண்டி சுபாஷ் மறையும் போது அங்கே மெயின் கேட்டில் பி.ஏ. பத்து வாட்ச்மேன்களோடு யாராவது வருகிறார்களா என்று கண்களில் விளக்கெண்ணெயை விட்டபடி பேயாய்த் தேடிக் கொண்டிருந்தார்!

# உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...




**செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த**

## ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரை வளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**

HES. G. 4. TH

# இங்கு மனக்கதவுகளுக்குப் பூட்டு இல்லை

போட்டிக் கதை 4

மது சிவ பாலா

இக்கதை ஆசிரியர் திருமதி கார்த்திகை பாலன் அறிமுக எழுத்தாளர். சேலத்தில் பிறந்து வளர்ந்த இவர் சேலம் ஜெயராணி பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் எஸ். எஸ். எல். ஸி. தேறியவர். இவரது பொழுது போக்கு, பத்திரிகைகளுக்குக் கதைகள் எழுதுவதுதான்! பழம் எழுத்தாளர் பூவை ஆறுமுகம், தாம் 'கார்த்திகை பாலன்' என்ற புனைபெயரில் எழுதி வருவதாக இவருக்குத் தெரிவிக்கவே, இந்த அறிமுக எழுத்தாளர் பெருந்தன்மையுடன் தமது பெயரை 'மது சிவ பாலா' என்று மாற்றிக் கொள்ள முன்வந்தார்!

படபடக்கும் இதயத்துடன் வேதா கேட்டைத் திறந்து கொண்டு அத்தையுடன் உள்ளே நுழைந்தாள்.

''யாரது?'' கம்பீரமான குரலும், அதைத் தொடர்ந்து சிவப்பாக ஒல்லியாக ஆனால் உறுதியான தேகக் கட்டுடன் ஒரு மனிதர் வீட்டின் பக்கவாட்டில் இருந்து வந்தார்.

''நான்...நான்....'' வேதாவுக்கு நாக்கு உள்ளிழுத்துக் கொண்டது போல் இருந்தது.

''நான் ஜெயராமனோட பெண். இவர் என் அத்தை. அப்பா இருபத்திரண்டு நாளுக்கு முன்னே போயிட்டார். சாகிறப்போ என்னைக் கூப்பிட்டு இந்தக் கடிதாசைக் கொடுத்து உங்ககிட்டே போகும்படி சொன்னார்!'' எப்படியோ சொல்லி முடித்தாள் வேதா.

அவள் நீட்டிய கடிதத்தை வாங்கிக் கொண்டு, ''சரி வா உள்ளே!'' என்றபடியே அவர் உள்ளே நடந்தார். வாசல் குறட்டில் ஏறி முன் முற்றத்தைத் தாண்டிக் கூடத்தில் பிரவேசித்தாள்.

''ஜெகி... ஜெகி....'' குரல் கொடுத்தார். தொடர்ந்துவட்ட வடிவமாகச்செக்கச் சிவந்த குங்குமம் பளபளக்க ஓர் அம்மாள் வெளிப்பட்டாள்.

''வாங்கோ... வாம்மா கொழந்தே...'' வெகுநாள் பழக்கப்பட்ட மாதிரி இயல்பாய்க் கூப்பிட்டாள். வேதாவுக்கு அந்த அம்மாளைப் பார்க்கப் பார்க்க அப்படியே கரைந்து அவளுடைய காலில் விழுந்துவிட மாட்டோமா என்றிருந்தது.

''என்ன ஜெகி அப்படியே நின்னுட்டே? அவாளை அழைச்சிண்டு போயி ஸ்நானம் செய்யச் சொல்லி டிபன் காப்பி எல்லாம் கொடேன்.'' வாசுதேவ சர்மா சிரித்துக் கொண்டே அம்மாளைப் பார்த்தார்.

கடிதத்தைப் பிரித்தபடியே ஈஸிச் சேரில் சாய்ந்தார்.

குளித்துவிட்டு ஸ்வாமி படத்தின் பக்கத்தில் நின்று கொண்டிருந்த வேதாவுக்கு அப்பாவின் முகமும் வார்த்தைகளும்தான் அடிக்கடி தோன்றின.

''வேதா, நான் எவ்வளவோ சம்பாதிச்சேன். ஆனா இப்ப உன்னை நிர்க்கதியாத்தான் விட்டுட்டுப் போறேன். தலைகாணிஅடியிலே நாகலாபுரம் வாசுதேவனுக்கு ஒரு கடிதாச வெச்சிருக்கேன். அதை எடுத்துண்டு அவன்கிட்டப் போ. எப்படியும் அவன் உன்னை நிர்க்கதியா விடமாட்டான். என்னு சினேகிதக்காரா மாதிரி நடிக்



அறிமுக எழுத்தாளர்

இறவாளைவிட விரோதிக்காரன் எவ்வளவோ மேல். ஆமாம்மா. அவனுக்கு நான் விரோதிம்மா. நான் துரோகி. அதை நான் என் வாயாலே சொல்லலே! நெல்லு மிஷின் கஜபதியோட மச்சினன் சீமாச்சுவை நீ என்னிக்காவது பார்த்தாயானு என்னைப் பத்தி விஷயத்தை யெல்லாம் அவன்கிட்டே இருந்து தெரிஞ்சுக்கோ.''

அப்பா பேசி முடித்த சுருக்கிலேயே மூச்சை முடித்துக் கொண்டார். காரியம் எல்லாம் முடிந்த பிறகு ஒரு நாள் ஆற்றங் கரைப் படித்துறையில் சீமாச்சுவைச் சந்தித்து விஷயம் தெரிந்து கொண்டாள் வேதா.

சற்றேறக் குறைய அப்பாவின் வயதையொத்த சீமாச்சு மாமாவை அவளுக்கு எப்போதுமே பிடிக்கும். அவர் பொய் சொல்ல மாட்டார் என்ற நம்பிக்கை அவளுக்கு உண்டு.

''சின்ன வயசிலிருந்தே நான், உங்கப்பா, குருக்கள் வீட்டு வாசுதேவன் மூணு பேரும் நெருங்கிய நண்பர்கள். மூணு பேரும் சேர்ந்து தான் இருப்போம். வளர்ந்ததும் எனக்கு வெளி உலக நடப்பெல்லாம் பிடிக்காததாலே பெருமாள் சேவைக்கு வந்துவிட்டேன். ஜெயராமும், வாசுதேவும் சேர்ந்து பக்கத்து டவுனில் மளிகைக் கடை வைத்தார்கள். அப்பவே அவர்கள் இரண்டு பேர் வீட்டிலேயும் தட்டிக் கேட்க ஆள் கிடையாது.

''மளிகைக் கடை கொஞ்ச நாள் நன்றாகத் தான் நடந்தது. ஜெயராம் வாசுவுக்குப் பொய்க் கணக்குக் காட்ட ஆரம்பிச்சான். வாசுவுக்கு ரொம்ப மனசு ஒடிஞ்சு போயிடுத்து. எங்கிட்ட வந்து வருத்தப்பட்டான். திடீர்னு ஒரு நாள் வாசுவோட அம்மாவுக்கு உடம்பு சரியில்லாமல் போய்விட்டது. செலவுக்குப் பணம் வேணும்னு ஜெயராம் கிட்டே கேட்டான் வாசு.

''ஜெயராம் ரெண்டாயிரம் ரூபா வாசு கிட்டே கொடுத்தான். ஆனால் அந்தப் பணம் வாசுவோட அம்மா காரியத்துக்குத்தான் பயன்பட்டது. காரியமெல்லாம் முடிஞ்சப்புறம் வாசு ஜெயராமனோட வீட்டுக்கு வந்தான். கடைக்கு மறு நாளில் இருந்து தானும் வந்துவிடுவதாக வாசு சொன்ன பொழுது உங்கப்பா ஒரு பெரிய வெடி குண்டைத் தூக்கிப் போட்டான்.

'வாசு! உன்னோட கணக்கெல்லாம் தீர்ந்தாச்சு. கடையிலே உனக்கென்ன இனிமே வேலை'ன்னு கேட்டான். வாசு அப்படியே துடிச்சுப் போயிட்டான். இருந்த ஒரே வீட்டைப் பன்னிரண்டாயிரத்துக்கு அடகு வெச்சுக் கடை வைக்க அவன் கொடுத்த போது அதை ரெண்டு கையாலேயும் வாங்கிண்ட உங்கப்பா இப்படி ரெண்டாயிரத்தோடு கணக்கை முடிச்சுடுவான்னு வாசு நினைக்கவே இல்லே. கடை நஷ்டத்தில் இருப்பதால் வாசு பங்கு அவ்வளவுதான்னு சொல்



விட்டான் ஜெயராமன். போதாக் குறைக்கு வாசுவோட வீடு ஏலத்தில் வந்தபோது அதை வாசுவின் கண் முன்னாலேயே தன தாக்கிக் கொண்டான் ஜெயராமன்.

''வாசுவுக்கு நன்றாகப் புரிந்தது. ஜெயராம் தனக்குத் துரோகம் செய்யறான்னு! மொத்தத்தில் உங்கப்பா வாசுவை ஏமாத்திச் சம்பாதிச்சதெல்லாம் கண்டபடி இரைத்துக் கட்டிறான். அவனுக்குத்துணை அவனோட அக்கா வீட்டுக்காரர்தான். அவரும் அளவுக்கு மீறிய குடியிலே குடல் வெந்து போனார். அப்புறம்தான் உங்கப்பன் ஓய்ந்தான்! அதுக்குள்ள அவன் சேர்த்த பணமும் அழிஞ்சு போயிட்டதும் எல்லாம் விதி வசம்! சரி, உங்கப்பா சொன்ன பிரகாரமே நீ வாசுதேவன் கிட்டப் போ. இறைவன் விட்ட வழி!'' என்று கோயிலுக்குள் போனார் சிமாச்சு.

''வேதா!''—பலமான குரல் வேதாவின் சிந்தனையைக் கலைத்தது.

''என்ன சார்... மாமா....'' தடுமாறினாள் வேதா.

''மாமான்னே கூப்பிடேம்மா...'' வாசுதேவன் கனிவாகச் சிரித்தார்.

தயக்கத்துடன் அவரெதிரே கீழே மண்டியிட்டு உட்கார்ந்தாள் வேதா.

''வாஸ்தவமாகவே அவனாலே நான் பட்ட கஷ்டங்கள் எவ்வளவோ. அவன் எனக்குப் பண்ணின சிநேகத் துரோகத்துக்கு மன்னிப்பே கிடையாது. ஆனால் அவன் பண்ணின பாவத்துக்கு நீ என்ன பண்ணுவே? அவன் எனக்கு என்னதான் துரோகம் பண்ணி இருந்தாலும் என் மேலே நம்பிக்கை வெச்சு உன்னை அனுப்பிச்சிருக்கானே... அதுக்கோசரமாவது உன்னை நான் கண் கலங்காமே என் குடும்பத்து மனுஷி மாதிரி பார்த்துக்கணும்'' — சிரித்தார் வாசுதேவன். ஒரு கணம் அப்பாவின் அல்பமான துரோகத்தையும் சின்ன புத்தியையும் நினைத்துத் தனக்குள் குன்றிப் போனாள் வேதா.

ஈஸிச்சேரை விட்டு எழுந்த வாசுதேவன் ''வேதா, வா அம்மா உனக்கு என் வீட்டில் உள்ள இன்னொரு ஜீவனை அறிமுகம் செய்விக்கவேணும்'' என்று புன்முறுவலுடன் சொன்னவாறே கூடத்தில் வலப்புறத்தில் சற்றே காற்றோட்டமான ஒரு பெரிய அறையினுள் நுழைந்தார்.

அவர் பின்னாலேயே வந்த வேதா அறை வாசற்படியில் தயங்கி நின்றாள். ஜன்னல் அருகில் சக்கர நாற்காலியில் வாசுதேவனைப் போன்றே கம்பீரத்துடன் இளநகையுடன் அவளையே பார்த்துக் கொண்டிருக்கும் இவர் யார்?

''வேதா! இவன்தான் என் பிள்ளை மதனகோபால்'' என்று அறிமுகப்படுத்திச் சென்றார் வாசு.

வேதா அவனுடன் பேசிய அந்த அரை மணி நேரத்தில் அவன் மீது பரிதாபமும் மதிப்பும் மரியாதையும் இவைகளை விட ஏதோ ஒரு பாச உணர்வும் அவள் மனத்தில் வலம் வந்தது.

ஜன்னல் பக்கத்தில் நின்றபடி குளிர்ச்சியான காற்றை அனுபவித்துக் கொண்டிருந்தாள் வேதா. கீழே பாயில் படுத்துக் கொண்டிருந்த அத்தை மெதுவாக எழுந்து அருகில் வந்தாள்.

''ம, வேதா, சொல்றேன்னு நீ கோவிச்சுண்டாலும் சரி, நீ பண்றது துளிக்கூட சரிப்படலே. இங்க வந்த இந்தப் பதினைந்து இருபது நாளிலே முக்கால்வாசி நீ அந்த நொண்டிப் பயலோட பேசிண்டே இருக்கே. அப்படி என்னடி ஒரு வயசுப் பொண்ணுக்கு அவன் கூட இளிச்சு இளிச்சுப் பேச வேண்டி இருக்கு? எப்படியாவது அந்த நொண்டிப் பையனை—உனக்குக் கல்யாணம் பண்ணி வெச்சிடணும். இதுதான் அவா நோக்கம்.''

மேலே பேசப் போன அத்தையைக் கையமர்த்தித் தடுத்தாள் வேதா. ''அத்தை! அப்படி வாசுதேவ மாமா முடிவு எடுத்தாலும் அதிலே ஒண்ணும் தப்பு இருக்கிறதா எனக்குத் தோணலே.''

''எப்படியோ போடி அம்மா. நொண்டி முடத்தைக் கட்டிக்கிறதுக்குன்னே உன்னை மாதிரி நாலு பேர் கைகட்டி நிக்கிறதுன்னு இருக்கச்சே வாசுதேவன் மாதிரி கிடைச்சது சந்தர்ப்பம்னு காத்திருக்கிறவாளும் நாலு பேர் இருக்கத்தானே செய்வா?'' முணு முணுத்துக் கொண்டபடியே அத்தை போய்ப் படுத்துக் கொண்டாள்.

அன்று வெள்ளிக் கிழமை. எண்ணெய் தேய்த்துக் குளித்துவிட்டுப் புறக்கடைப்

நீ உதவினாய் - அவன் உனக்குதவினான் இது-நியாயம்;
உன்னிடமிருந்து எதையோ எதிர்நோக்கி அவன் உனக்குதவினால் அது தன்னலம்;
நீ அவனுக்குப் பணம் கொடுக்கிறாய்; அவன் உனக்குதவுகிறான் - இது வியாபாரம்;
நீ அவனுக்குத் தீங்கிழைத்திருந்தாலும் அவன் உனக்குதவுகிறான் - அது மன்னிப்பு;
நீ ஒரு ஏழை - அவன் உனக்குதவுகிறான்-இதுதான் நட்பு!
- எம். கே. நாராயணன்






"எனது கூந்தல்
அடர்த்தியாகவும் பட்டுப்
போல் மிருதுவாகவும்
வளரக் காரணம்"

**V.Y.D**

# தேங்காய் எண்ணெய்



உங்கள் தேவைக்கேற்றபடி
பலவித பாக்கிங்குகளில்
கிடைக்கின்றது.

V.V. தனுஷ்கோடி
நாடார் & சன்ஸ்
தூத்துக்குடி-628 001

---

யுகஸ்லேவியா நாட்டில் 30 லட்சம் பிரதிகள் விற்பனையாகும்
ஒரு ஆங்கில இதழைப் பின்னணியாகக் கொண்டது !
**அக்டோபர் 1ம்-உ முதல் வருகிறது**

# ராஜாமலர்

ஆசிரியர் :
**நம்பி (ஓவியர்)**

பிரபல ஓவியர்களும்,
எழுத்தாளர்களும்,
பங்குபெறுகிறார்கள்.

தனிப் பிரதி 75 காசு
ஆண்டு சந்தா ரூ. 36-00
ஆறுமாத சந்தா ரூ. 18-50

ஏஜென்ஸி விபரங்களுக்கு:

**ராஜாமலர்** (வார இதழ்)
**17. கங்கையம்மன் கோயில் தெரு,**
**சூளைமேடு, சென்னை-600 094.**



பக்கம் கன்றுக்குட்டியைத் தடவியபடியே ஏதோ யோசனையில் இருந்தாள் வேதா.

''வேதா... வேதா... உன்னை மாமா கூப்பிடுறார் பார்... இந்தா இந்தக் காப்பியைக் கொண்டு போய் அப்படியே மாமா கிட்டக் கொடுத்துடு'' என்று சொல்லியபடியே காப்பி டபராவைக் கையில் கொடுத்தாள் ஜெகதா மாமி.

காப்பியைக் கையில் வாங்கிக்கொண்ட வாசுதேவன் ''வா அம்மா வேதா உங்கிட்ட முக்கியமான விஷயம் பேசணும். இப்படி உட்கார்.'' என்று சொன்னதும் ரேழியில் தன்பாட்டுக்கு உட்கார்ந்து மோட்டு வளையைப் பார்த்துக் கொண்டிருந்த அத்தை கூடத்துத் தூணோரமாய்க் காதைத் தீட்டிய படியே வந்து நின்றாள்.

''அம்மா வேதா, நீ இன்னும் சின்னப் பொண்ணு இல்லே. உனக்கும் வயசா யிண்டே போறது. உனக்கும் காலா காலத்தில் செய்து முடிக்க வேண்டிய பெரிய கடமை ஒண்ணைச் சீக்கிரமே செஞ்சிடலாம்னு இருக்கேன். நீ இஷ்டப்பட்டால்தான் எதையும் செய்வேன்!'' என்றபடியே பேச்சை நிறுத்திவிட்டு அவளைக் கூர்ந்து பார்த்தார் வாசுதேவன்.

'கடன்காரன்... இடுக்கிப் பிடி போட்டுட்டானே!' என்று அத்தை மனத்துக்குள் புலம்பினாள்.

''வேதா! இந்த வயசிலே என்னாலே ஓடி ஆடித் தேட முடியாது! அதனாலேதான் பகவானும் பார்த்து ஒரு நல்ல மாப்பிள்ளையை அனுப்பி இருக்கான். நீ சரின்னு சொன்னியானால் உடனே கோவில்ல வெச்சு எளிமையா நல்லபடியா முடிச்சிடலாம். மாப்பிள்ளை யார் தெரியுமோ?'' என்று கேலியாகக் கேட்டார் வாசுதேவன்.

---

''எனக்குத் தெரியாமே மஞ்சள் காமாலைக்குக் கண்ட மருந்து களைச் சாப்பிட்டீங்களா?''

''ஆமா டாக்டர்..... என்ன ஆச்சு?''

''டெக்னிக்கலர் காமாலை ஆயி டுச்சு!''

- முத்துதங்க ஐயப்பன்



வாய்வரை வந்துவிட்ட, 'ஓரளவு யூகிச்சு வச்சிருக்கேன்' என்ற சொல்லை விழுங்கிவிட்டு மௌனமாய் அவரைப் பார்த்தாள் வேதா.

''என் ஒண்ணுவிட்ட தங்கை பையன், பக்கத்துக் கிராமத்திலே ஸ்கூல் ஹெட் மாஸ்டராய் இருக்கான். நல்ல இலட்சியவாதி. உனக்கு — உன் அடக்கமான குணத்துக்கு ஏத்த ஜோடி. ஏதோ ஆண்டவன் கிருபையாலே கொஞ்சம் சொத்தும் இருக்கு. பையன் தங்கமானவன். ஒரு கெட்ட பழக்கம் இல்லே. அதோட நான் சொன்னால் எதையும் கேட்பான். நான்தான் அவனை வளர்த்து ஆளாக்கினேன். என்னம்மா சொல்றே?''

''மாமா!'' என்று தழுதழுத்த குரலில் அவரை ஏறிட்டுப் பார்த்தாள் வேதா.

''அம்மா வேதா! நான் ஒன்னைவிட வயசில் பெரியவன் அம்மா. நீ இங்க வந்து உட்காரும்போதே உன் மனசில் என்ன நினைச் சேன்னு எனக்குத் தெரியும். ஒன்னையும் உன் அத்தையையும் இந்த வீட்டிலே நான் சேர்த்துண்டதுக்குப் பிரதியா எங்க மதன கோபாலை உனக்குக் கல்யாணம் பண்ணி வைச்சுடுவேன்னுதானேம்மா நீ நினைச்சே?''

''மாமா... வந்து....'' என்று தயக்கத்துடன் ஆரம்பித்தவளைத் தடுத்து, ''அது எப்படி அம்மா! தங்க ஊசி அப்படின்னு அதை எடுத்துக் குத்திக்க முடியுமோ? நீ என்னதான் என் சினேகிதன் பொண் ஆனாலும்என் வீட்டுக்கு வந்திட்டப்புறம்எனக்கும் பொண் மாதிரிதானே! என் பெண்ணைக் கொண்டு போய்க் கால் ஊனமான ஒருத்தனுக்குக் குடுப்பேனா? நீயும் என் தங்கை பையன் வேணுகோபாலனை ஒரு தரம் பார். அப்புறம் பிடிச்சால் சொல். முடிச்சிடலாம். அவனுக்குக் கண்டிப்பா ஒன்னைப் பிடிக்கும். ஒன் மாதிரி தங்கக் கட்டி கிடைக்க அவன் கொடுத்து வைச்சிருக்கணுமே!'' என்றார்.

லேசான வெட்கத்தில் கன்னம் சிவக்க மௌனமாய்த் தோட்டத்துப் பக்கம் போய் நின்றாள் வேதா. 'ஓ! — இந்த வீட்டில் உள்ள மனிதர்களுக்கு எத்தனை நல்ல இதயம்! இவர்கள் மனக் கதவுகளுக்குப் பூட்டே இல்லை. திறந்த அந்த மனங்களில் எத்தனை நல்ல எண்ணங்கள்!'

'கிரீச்' என்ற சக்கர நாற்காலியின் ஓசை கேட்டது. வெண் பற்கள் பளிச்சிட நகைத்த படியே சக்கர நாற்காலியை உருட்டிக் கொண்டே வந்த மதனகோபால், ''என்ன வேதா! வேணு சாயந்திரம்தான் வருவான். அதுக்கேன் இப்பவே புடிச்சு வாசற்புறம் வந்து நிக்கறே? பூமணி கிராமம் பக்கம்தான். இங்கே எங்க வீட்டிலே ஒரு கிளி இருக்குன்னு தெரிஞ்சா உடனே பறந்து வந்தாலும் வந்திடுவான்!'' என்று கிண்டல் செய்தான்.

''போ கோபால்... இப்படிக் கிண்டல் செஞ்சா...'' என்று செல்லமாகச் சிணுங்கிய வேதாவை அணைத்தவாறே உள்ளே அழைத்துச் சென்றாள் ஜெகதா மாமி.

அத்தை ஆனந்தக் கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள்.

# ஆராதனை

நம்ப முடியாத கதை. அழகான மலைப் பிரதேசம். பணக்கார அனாதை வசந்த் மேல் இந்துவுக்குக் காதல். குளுமையான பின்னணிகளில் டூயட் பாடிவிட்டு வீட்டைக் காட்ட இந்துவை ஒரு தேர்ந்தெடுத்த நாளில் அழைத்து வருகிறான். வசந்த் மாளிகையைச் சுற்றிக் காட்டும்போது,வேலைக்காரன் மூலமாய் வசந்த் ஒரு ஸ்திரீலோலன் என்று கேள்விப்பட்டுஅதிர்கிறாள். ஓடிப்போய்அப்பா பார்க்கும் ப்ரதீப்பை மணக்கிறாள். அம்போ என விடப்பட்ட வசந்தோ இந்துவை அடைய பில்லி சூனியம் செய்கிறான். வெள்ளி அமாவாசையில் ஆடு பலி தந்து. பேய் சவகாசம் பெற்று — இந்து ப்ரதீப்பை நெருங்க விடாமல் தடுத்து — நடுவில் செத்து — பின் பேயாக இந்துவை வா வா என அழைத்துக் கடைசியில் சாமியார் தந்த சாமி சிலையால் புகையாகி மறைகிறான். இத்தனைக்கும் காரணம், ப்ரதீப் என்று சஸ்பென்ஸ் சொல்கிறார்கள். அவன்தான் இந்துவை அடைய வசந்த் பேரில் அவதூறு — வேலைக்காரன் மூலம் சொன்னவன். வசந்தின் நண்பன். ஆனால் நமக்கு இது ஆரம்பத்திலேயே புரிந்து போய்விடுகிறது.

வசந்தாய் வரும் சுமன் நிச்சயம் முன்னேறியிருக்கிறார். இந்து — சுமலதா முகத்தில் காதல் வழிகிறது. கோபம்கூடத் தெறிக்கிறது. தீர ஆராயாமல் வசந்தைக் கழற்றி விட்டிருக்க வேண்டாம். காதலின் மகிமையே சாகிறது. மித்ர த்ரோகி ப்ரதீப்பாய் வரும் ரவி நிழல்களில் பெற்ற பெயரைக் காப்பாற்றிக் கொள்கிறார், சுமலதாவுக்கு அம்மாவாய் சுமலதாவின் அம்மாவே நடிக்கிறார். பூபதி தலைகாட்டி மறைந்து போகிறார்.

சவீதாவின் வசனங்கள் சுமாருக்கு மேல். கேமராவும் மியூஸிக்கும் சேர்ந்து நிறையப் பயமுறுத்துகின்றன. காரை வழிமறிக்கும் நாய்களும், கழுத்தை நெரிக்க வரும் குழந்தையும், பூதமாய்க் காட்சி தரும் இந்துவும் படத்துக்கு 'ஏ' முத்திரை குத்த வைக்கிறார்கள். வைரமுத்து கங்கை அமரன் பேனாக்கள் விளையாடுகின்றன. கண்களைக் கஷ்டப்படுத்தாத காமிரா. காதுகளைக் கஷ்டப்படுத்தாத இசை.

| | |
|---|---|
| சுமலதா | 0—25 |
| ரவி | 0—25 |
| சுமன் | 0—30 |
| சுமனுக்கு ஸ்பெஷலாக (ஆவி அழியும் காட்சிக்கு) | 0—20 |
| திகில் | 1—40 |
| கேமரா | 0—50 |
| இசை | 0—50 |
| | 3—40 |
| கொடுப்பதுரு | 2—90 |
| திகில் பிரியர்களுக்கு லாபம் | 0—50 |

இடைவேளை வரை சிக்கலில்லாத காதல் கதையாகக் கொண்டு செல்லும் டைரக்டர் பிரசாத் அதற்குப் பிறகு மசாலா மந்திர-வாதி கணக்காக பேய் என்றும் பில்லி சூன்யம் என்றும் பயமுறுத்தி ....... ஓமன், எக்ஸார்ஸிஸ்ட் ஆகியவற்றுக்குப் பிறகு இது தானே ஃபாஷன்! இடைவேளை வரை ஆராதனை இடைவேளைக்குப் பின் ஆ! ரோதனை!

—நளினி சாஸ்திரி



# வேலைக்குப் போகும் பெண்

நடிப்பு:
டணால் தங்கவேலு

கதை:
சாருகேசி, தமயந்தி

சித்திரம்:
செல்லம்

போட்டோ: உத்ரா

9
















ஆமாடா, உனக்கு ஒரு கவலை. சொல்லுங்க மாமா, வெட்டு ஒண்ணு, துண்டு ரெண்டுன்னு - கட்டிங்க பொளக்கற மாதிரி!
ஊருக்குப் போயிருக்கிற ஜிம்மியோட அம்மாவும் அப்பாவும் நாளைக்கி வராங்க. வந்து உடனே முகூர்த்தம்தான், திருமணம் தான், மூணு முடிச்சுத் தான்!
போங்க மாமா, எனக்கு வெக்கமா இருக்கு!


இருக்கற வெக்கத்தை யெல்லாம் பத்திரமாச் சேத்து வச்சுக்கம்மா. கல்யாணத்தன்னிக்குக் கொஞ்சமாவது தலைகுனியப்பட வேண்டாமா?
அப்போ, அம்மா எந்தக் கம்பனியில ஜிம்மு வுக்கு வேலைன்னு கேட்டா என்ன சொல் றது? எத்தனை சம்பளம்னு சொல் றது?
அட, இதுல என்ன கஷ்டம்? ஏதாவது வாய்க்கு வந்த பேரு ஒண்ணைச் சொல் றது; சம்பளம் ஐந்நூறு ரூபாய்ங் கறது.
அம்மா ஜிம்மு, நீ இன்னிலருந்து போலி ஏஜென்ஸிலே டைப்பிஸ்ட்! சரிதானா?


அது எதுப்பா போலி?
அது எங்கேங்க இருக்குது?
போலியா? இந்தக் கடவுள் பேரைத் தான் சொல்றேன். அவன் தான் நம்பளைக் காப்பாத்தணும்!
தொடரும்

திருத்தலம் கண்டேன்



# மயிலாடுதுறை

தக்ஷன் பிரும்மாவினுடைய பிள்ளை. அவன் தவம் புரிந்து அம்பிகையைத் தனக்கு மகளாகவும் பரமசிவனை மருமகனாகவும் அடைந்தான். தக்ஷனுக்குப் பெண்ணாக வந்ததால் தாக்ஷாயணி என்ற பெயர் அம்பிகைக்கு அமைந்தது. தக்ஷன் ஒரு யாகம் செய்யத் தொடங்கினான். சிவபெருமானிடத்தில் அவனுக்குப் பக்தி இல்லை. அவரை அவமதிக்க எண்ணினான். யாகத்துக்கு மற்ற தேவர்களை எல்லாம் அழைத்தான். சிவபெருமானை அழைக்கவில்லை. ஆனாலும் தாக்ஷாயணி அந்த யாகத்துக்குப் போனாள். அவளையும் தக்ஷன் சரியானபடி வரவேற்கவில்லை. அவமதிப்புச் செய்தான். அதனால் அம்பிகைக்குக் கோபம் உண்டாகி விட்டது. நேரே கைலாசத்துக்கு வந்து சிவபெருமானிடம் முறையிட்டுக் கொண்டாள். அதை அறிந்த பெருமான் வீரபத்திரரை அனுப்பி தக்ஷன் செய்த யாகத்தை அழிக்கச் செய்தார்.

தாக்ஷாயணிக்குத் தன் தந்தையின் அவமதிப்புக்கு ஆளானது பொறுக்கவில்லை. அவனுக்குப் பெண்ணாக இருக்கும் இந்த உருவத்தை மாற்றிக் கொண்டு பெண் மயிலாக உருவம் கொண்டு மாயூரத்துக்கு வந்து இங்கே எழுந்தருளியிருக்கும் சிவபெருமானைப் பூஜித்துத் தவம் புரிந்தாள். இறைவன் ஆண் மயிலாக உருவெடுத்துத் தோன்றி அம்பிகையாகிய பெண் மயிலோடு இன்ப நடனம் ஆடினார். பிறகு இருவருக்கும் திருமணம் நடைபெற்றது. அப்போது சிவபெருமான் இங்கே ஒரு தாண்டவம் செய்தார். அதற்கு கௌரீ தாண்டவம் என்று பெயர். அம்பிகை மயிலாகப் பூஜித்ததால் இத்தலம் கௌரி மாயூரம் என்ற பெயர் பெற்றது.



⌘ மயில், பூஜை செய்யும் சிற்பம்

இந்த நடனம், திருமணம் நிகழ்ச்சிகள் ஐப்பசி மாதத்தில் நிகழ்ந்தன. ஆதலால் இவ்வூர் ஆலயத்துக்கு ஐப்பசி மாதம் திருவிழா. இந்த விழாவில் ஐந்தாவது நாளில் அம்பிகை இறைவனுக்குப் பூஜை செய்யும் உற்சவம். அதை மயிலம்மன் பூஜை என்று சொல்வார்கள். ஏழாவது நாள் திருமணக் காட்சியும் ஒன்பதாவது நாள் தேர்த் திருவிழாவும் உண்டு.

ஐப்பசி மாதத்தைத் துலா மாதம் என்று சொல்வார்கள். இந்த மாததில் காவிரி தனிச் சிறப்புப் பெறுகிறது. கங்கையே காவிரியோடு இணைந்துவிடுவதாகப் பக்தர்கள் நம்புகிறார்கள். துலா மாதத்தில் காவிரியில் நீராடுவதால் நன்மை உண்டாகும். மாயூரத்தில் நீராடினால் அதிக நன்மைகள் ஏற்படும்.

மயிலாடு துறையில் ஐப்பசி மாதம் முப்பது நாளும் திருவிழாதான். கடைசி நாளை ''கடைமுகம்'' என்று சொல்வார்கள். காவிரியில் துலா ஸ்நானம் செய்யும் கட்டத்துக்கு ''ரிஷப தீர்த்தம்'' என்று பெயர். இறைவனுடைய வாகனமாகிய ரிஷப தேவர் இந்தத் தலத்தில் பூஜைசெய்து வரம்பெற்று இந்தத் தீர்த்தத்தில் நீராடினார். காவிரிக்கு நடுவில் ரிஷப தேவருடைய விக்ரகத்துடன் சிறிய கோவில் உள்ளது.

விழாவில் மாயூரநாதர் எழுந்தருளியிருப்பதற்குக் காவிரிக் கரையில் மண்டபங்கள் இருக்கின்றன. இவற்றை ''லாகடம்'' என்று சொல்கிறார்கள். ''துலாகட்டம்'' என்ற பெயரே லாகடம் ஆகி விட்டது.

மாயூரநாதர் கோவில் பெரியது. இங்கு உள்ள மாயூர நாதரை வள்ளல் என்றும் பேசுவார்கள். அம்பிகையை அஞ்சலை என்று தமிழிலும் அபயாம்பிகை என்று வடமொழியிலும் வழங்குவார்கள். இது தேவா

என்.ராமகிருஷ்ண

ரம் பெற்ற தலம். மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் இயற்றிய புராணம் ஒன்றும் உண்டு. மயிலை அந்தாதி முதலிய பிரபந்தங்களும் உள்ளன. கோவில் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சார்ந்தது.

நந்தனார் சரித்திரம் பாடிய கோபால கிருஷ்ணபாரதி தம்முடைய இறுதிக்காலத்தை இங்கு கழித்தார். மகா வித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை இங்கு வாழ்ந்தார்கள். தமிழ்த் தாத்தா உ.வே. சாமிநாத அய்யர் சில காலம் இங்கு இருந்திருக்கிறார். முன்சீப் வேதநாயகம் பிள்ளை இவ்வூரைச் சேர்ந்தவர். ஆனால் அவருக்கு நினைவுச் சின்னம் இந்த ஊரில் இல்லையே!

வள்ளலார் கோயிலில் தக்ஷிணாமூர்த்தி சந்நிதி விசேஷம். அவரை மேதா தக்ஷிணா மூர்த்தி என்றும் அழைப்பார்கள். கார்த்திகை மாதம் மகாபிஷேகம் நடைபெறும்.

ஒருமுறை எங்கள் ஊருக்கு வந்து போகிறவர்கள் ''ஆயிரமானாலும் மாயூரமாகுமா?'' என்று மனநிறைவோடு கேட்காமல் திரும்ப மாட்டார்கள்!

புகைப்படங்கள்: கட்டுரை ஆசிரியர்

# சுருக் பதில்கள்!

✖ பி. பி. ராஜகோபால், ஈரோடு - 6

கே: பொய்யில் இருக்கும் அலங்காரம் உண்மையில் இல்லையே?

ப: எப்படி இருக்கும்? ஜோடனைகளால் உருவாக்கப்படுவதுதானே பொய்.

✖ பா. செந்தில் குமார், விருத்தாசலம்

கே: நிறைய சாப்பிட்டு விட்டதால் ஒருவனால் எழுந்து வேலை செய்ய முடியவில்லை. மற்றொருவன் பட்டினி காரணமாக வேலை செய்ய முடியவில்லை. இதிலிருந்து என்ன தெரிகிறது?

ப: அதிகச் சாப்பாடு உள்ளவன் சாப்பாடே இல்லாதவனுடன் கொஞ்சம் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்று தெரிகிறது. இரண்டு பேருமே ஆரோக்கியமாக வாழ இதுவே வழி!

✖ கே. எம். இளங்கோ, குப்புச்சிபாளையம்

கே: ஊனமுற்றவர்களைப் பார்த்துச் சிலர் பரிகாசம் செய்கிறார்களே...?

ப: தனிப்பட்ட முறையில் பரிகாசம் செய்வதே தப்பு. இப்படியிருக்க நாடகங்களிலும், திரைப்படங்களிலும் நகைச்சுவை என்ற பெயரில் காது மந்தமான கதாபாத்திரத்தையும், திக்குபவரையும் போட்டுச் சிரிப்பூட்டப் பார்க்கிறார்களே. இந்த அநாகரிகத்தை என்னவென்று சொல்வது?



✖ திருமதி லலிதா வரதராஜன், சங்கரி

கே: தன் ஆசை, தன் கோபம், தன் வருத்தம் என்று தன்னைப்பற்றியே மாய்ந்து போகும் மனிதர்கள் அடுத்தவர்கள்மனத்தை எப்போது புரிந்துகொள்வார்கள்?

ப: இந்தக் குற்றத்துக்கு உள்ளாகிறவர்கள் முக்கியமாக ஆண்கள்தான். சம்பாதிப்பதால் தனக்கு வரும் கவலை, நோய், கோபம், ஆசை ஆகியவைதான் முக்கியம் என்று அவர்கள் கருதுகிறார்கள். வேறுசிலர் தான் கணவன் அல்லது குடும்பத் தலைவன் அல்லது உயர் அதிகாரி என்கிற காரணத்தால் இப்படிப்பட்ட மனப்பான்மையை அவர்களை அறியாமலேயே வளர்த்துக் கொள்கிறார்கள். கணவன், மனைவி இரண்டு பேரும் வேலைக்குப் போய் வீடு திரும்புகிறார்கள். ஆனால் மனைவிதான்எல்லா வேலைகளையும் செய்ய வேண்டும், வீட்டில். ''எனக்கு ரொம்ப டயர்டாக இருக்கு'' என்ற கணவன் கூறிவிடுவான். மனைவியும் அவனை மாதிரியே வேலை செய்துவிட்டுத்தானே வீடு திரும்பியிருக்கிறாள் என்று ஒரு கணம்கூடச் சிந்திக்க மாட்டான். அடுத்தவர்கள் மனத்தைப் புரிந்து கொண்டால் சில தியாகங்களைச் செய்ய வேண்டியிருக்கும். இங்கு சுயநலம் தலைதூக்கி நிற்பதால் தன்னைப் பற்றியே எண்ணி மாய்ந்து போகிறார்கள் பலர்.

✖ ராதா நாராயணன், கல்கத்தா 29

கே: மழலை, குதலை என்ற இரு வார்த்தைகளுக்கும் வித்தியாசம் உள்ளதா?

ப: மழலை — எழுத்துருப் பெற்றும் சொல் நிரம்பாதது. குதலை — எழுத்தும் சொல்லும் நிரம்பாதது. (ஒரு தமிழாசிரியர் சொன்ன விளக்கம்).

✖ வி. ஜெயா, உறையூர்

கே: முக்கியமானது எது?

ப: கேள்வி கேட்பதை நிறுத்தாமல் இருப்பது. இது ஐன்ஸ்டீன் பொன் மொழி. கேள்வி கேட்கப்படும்போதுதான் பல விஷயங்கள் தெளிவு பெறுகின்றன. பல புதிய பாதைகள் தெரிகின்றன.

பரிசுபெறுபவர்: கே. எம். இளங்கோ
குப்புச்சி பாளையம்,
638-182



● சேலத்தில் கஞ்சமலைப் பகுதியில் இரும்புதாதுப் பொருள் ஏராளமாக இருக்கிறது என்று அங்கே எஃகு ஆலை தொடங்க எல்லோரும் மத்திய அரசை வற்புறுத்தியபோது கஞ்சமலையில் உள்ள தாதில் போதுமான இரும்புச் சத்து இல்லை என்ற காரணத்தைச் சொல்லி, திட்டம் தட்டிக் கழிக்கப்படும் நிலை இருந்தது. இப்போது கதை மாறிவிட்டது: நவீன தொழில் நுட்பச் சாதனைகளுக்குத் தேவையான ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் தகடுகளையும், கம்பிகளையும் ஆலை தயாரிக்கும்! இதற்குக் கஞ்சமலைத் தாதுப்பொருள் பயன்படப் போவதில்லை.

# சேலம் உருக்காலை: சில தகவல்கள்

● 'ஹாட்ரோல்டு' ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் கம்பிகள்தாம் மேற்படி தயாரிப்புக்கு அடிப்படையான மூலப்பொருள். இதை இறக்குமதி செய்துதான் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் தயாரிக்கப் போகிறார்கள்!

● எத்தனை நாள் இறக்குமதியை நம்பியே இருப்பது? துர்காப்பூரில் கலவை உலோக ஆலையில் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் கட்டைகள் செய்து, பொகாரோவில் 'ஹாட் ரோல்டு' கம்பிகளாக மாற்றும் உத்தேசம் இருக்கிறதாம். இது சாத்தியமானால், சேலம் உருக்காலைக்குத் தேவையான மூலப்பொருளை இறக்குமதி செய்ய வேண்டியிராது. இன்று செலவாகும் 40 கோடி ரூபாய் அந்நியச் செலாவணி அப்போது மிச்சமாகும்!

● ஸ்டெயின்லெஸ்ஸ்டீல் எந்தெந்த தொழில் துறைகளுக்குப் பயன்படும்? பெட்ரோலிய-ரசாயனத் தொழிற்சாலைகள், ரசாயனத் தொழிற்சாலைகள், உரத் தொழிற்சாலைகள், அணுசக்தி ஆலைகள், பால் பண்ணைகள் முதலியவற்றுக்கு.

● கம்ப்யூட்டர் உதவியோடு கூடிய தொழில் நுட்பத் திறன் + அதிவேக சுழல் திறன் (ஹை ஸ்பீட் ரோலிங்) கொண்டது சேலம் உருக்காலை. இந்த அதிவேக சுழல் திறன் கொண்ட மில்லுக்கு சென்ட்ஸிமிர் மில் என்று பெயர்.

● ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் தகடுகளையும் கம்பிகளையும் உருவாக்கும் சேலம் உருக்காலைதான் இந்தியாவிலேயே மிக நவீனமானது.

● திட்டமிட்டபடியே 54 மாதங்களுக்குப் பிறகு, கணக்காக, உற்பத்தி தொடங்கப்பட்டது. (ஆச்சரியமாக இல்லை!)

● சேலம் உருக்காலைக்கு மொத்தமாகச் செலவிடப்பட்டுள்ள தொகை 167 கோடி ரூபாய். ஒரு சென்ட்ஸிமிர் மில் மட்டுமே கொண்ட இந்த உருக்காலையின் உற்பத்தித் திறன் ஆண்டு ஒன்றுக்கு 32 000 டன். இன்னுமொரு 30 கோடி ரூபாய் செலவிட்டு இன்னொரு சென்ட்ஸிமிர் மில் நிறுவிவிட்டால் உற்பத்தித் திறன் இரு மடங்கு ஆகிவிடும்! இதைச் செய்துவிட்டால், இந்த ஆலைக்குப் பொருளாதார ரீதியில் நல்ல பலன் கிடைக்கும். அதுவரை லாபம் காண்பது கஷ்டமே!

● சிறுதொழில் அமைப்புக்குத் தேவையான ஸ்டெயின்லெஸ் ஸ்டீலை இந்த உருக்காலை அளிக்கும். சேலத்தைச் சுற்றியுள்ள பகுதிகளில் பல சிறுதொழில்கள் அமைய இந்த உருக்காலை காரணமாக இருக்கும்.

● தற்போது இங்கே பணிபுரியும் தொழிலாளர்களின் எண்ணிக்கை 900. உற்பத்தி உச்சநிலை அடையும்போது மொத்தமாக 1200 பேர் தேவைப்படுவார்கள். தொழிலாளர்க்கான டவுன்ஷிப் உருவாகி வருகிறது.

● அது சரி, வீட்டு உபயோகத்துக்கான எவர்சில்வர் பாத்திரங்கள் விலை குறையுமா? அதிகமாகாமல் இருந்தாலே புண்ணியம்! ('பாம்பே ஹை'யில் க்ரூட் நிறையக் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. காஸ் உற்பத்தியும் துவங்கிவிட்டது என்றார்கள். ஹை ஹை என்று குதித்தபொழுது, மண்டையில் அடிக்கிற மாதிரி காஸ் ஸிலிண்டர் விலையைஐம்பது ரூபாயாக உயர்த்தவில்லையா!)

- எஸ். விசுவநாதன்

# சுவர்ணமுகி

**ஸ்ரீ வேணுகோபாலன்**

''இந்த நாட்டில் மழை பெய்து விட்டால் ஒரே தண்ணீர் காடுதான். போக்குவரத்து எதுவும் முடியாது.''

- ஜான் டி பிரிட்டோ

## 26

**''ச**த்தம் போடாதீங்க! எழுந்திருங்க! வெளியிலே போறோம்!'' என்றான் ஸ்ரீரங்கன்.

சுவர்ணமுகி இன்னும் அவநம்பிக்கையில் இருந்தாள். அவன் தத்தளிப்பதைப் பார்த்தால் எந்த நிமிடமும் கத்திவிடுவாள் போல.

ஸ்ரீரங்கன் பதறினான். ''தயவுசெய்து கேட்டுக்கிறேன். சத்தம் போடாதீங்க..... என்னை நம்புங்கள்!'' என்று மிகவும் நயத்துடன் கூறினான்.

சுவர்ணமுகி யோசித்தாள்.

ஸ்ரீரங்கன் குரலில் சிறு அளவு உண்மைத் தன்மையும் இருந்தது. இதுவரை அவளிடம் அவன் தப்பிதமாக நடந்ததில்லை. நம்பினால் என்ன?

இடுப்பைத் துழாவினாள். செல்லி கொடுத்த விஷ வேர் இன்னும் இருந்தது. ஏதாவது நடந்தால் வாயில் போட்டு மென்றுவிடலாம்.

செல்லியை எழுப்பினாள். இருவரும் புறப்பட்டார்கள். பின்புறக் கதவைத் திறந்தார்கள். கிணற்று வழியே நடந்தார்கள். தொழுவத்திலிருந்து ஒரு லட்சுமி திரும்பிப் பார்த்தது.

வெளியே ஒழுங்கில்லாப் படிகளில் இறங்கினார்கள். ஒரே சகதி! குளிர் இன்னும் வாட்டியது. அங்கும் இங்கும் நீர்ப் பாய்ச்சல்களின் கொட கொடக்கள். எத்தனை நாட்களுக்குப் பிறகு சுதந்திரமான வெளிச்சக் காற்றைச் சுவாசிக்கிறாள்?

முட்டுவரை சகதிப் பாங்கில் நடந்து இரண்டு மண் பாதைகளைக் கடந்து, சாலைக்கு வந்தார்கள். அருகில் உள்ள குட்டைகளில் கால்களைக் கழுவினார்கள். இரண்டு குதிரைகள் காத்திருந்தன. ஒரு வேலையாள் வணக்கமாக நின்றான்.

''ஏறிக்குங்க!'' என்றான் ஸ்ரீரங்கன்.

பலமுறை முயன்று ஏறினார்கள்.

வேலையாள் குதிரையை நடத்திச் சென்றான். ஸ்ரீரங்கன் முன்னால் போனான்.

போகும் வழியெல்லாம் வெள்ளக் காடாக இருந்தது. சின்ன ஓடைகள் கூடப் புடைத்துக்கொண்டு ஓடின. போகிற வழியெல்லாம் வழுக்கலாக இருந்தது. குதிரைகள் மெதுவாக நடந்தன.

விடியும்போது ஒரு சிற்றூரில் சத்திரத்தில் இருந்தார்கள்.

அன்றைய தினம் முழுவதையும் அங்கே கழித்துவிட்டு இரவு மீண்டும் புறப்பட்டார்கள்.

இரண்டு நாட்கள் பிரயாணம் செய்து தோத மலையை அடைந்தார்கள். சற்றுப் பெரிய ஊர். வெளியே தோப்புக்கள் சூழ்ந்த சில மாளிகைகள் இருந்தன. ஒரு மாளிகையில் அவர்கள் இறங்கினார்கள்.

மாளிகையில் இறக்கிவிட்டு இரண்டு வேலையாட்களைத் துணை வைத்துவிட்டு ஸ்ரீரங்கன் இதர பொருட்களைச் சேகரித்து வருகிறேன் என்று போனான். இரண்டு நாட்களில் ஒரு குடித்தனத்துக்கான சகல மளிகைப் பொருள்களையும் இதர வசதிகளையும் கொண்டுவந்து சேர்த்தான்.

சுவர்ணமுகி எல்லாவற்றையும் பற்றில்லாமல் கவனித்தாள். உள்ளூர ஒரு கலக்கம் இருந்தது. ஸ்ரீரங்கன் அவளை சுவர்ணமுகி என்று அறிந்திருக்கிறான். யார் சொன்னார்கள் தெரியவில்லை. இப்படி எல்லோருக்கும் தன் இரகசியம் பரவிவிட்டால் இங்கே வாழ்வது கடினம்?

இந்த ஸ்ரீரங்கன் எதற்காக இதை எல்லாம் செய்கிறான்?

துர் நோக்கம் இருக்குமோ? புரியவில்லை.

ஒரு மாதம்வரை சுவர்ணமுகி அவனிடம் பிடி கொடுத்துப் பேசவில்லை.

அவன் பேச வந்தால்கூட ஒதுங்கிப் போய்க் கொண்டிருந்தாள்.

அவனும் அவளை அதிகம் தொந்தரவு செய்யவில்லை. ஒரு க்ஷேம விசாரிப்புக்கு மட்டும் அவளைப் பார்த்துவிட்டுப் போனான்.

நாட்கள் போகப் போக சுவர்ணமுகிக்கு அச்சங்கள் ஏற்பட்டன. இங்கேயே இருந்து



கொண்டிருந்தால் முடிவு? ஒரு இதமான வார்த்தையைக்கூட யாரிடமும் பரிமாறிக் கொள்ளவில்லையே. எல்லோரும் அன்னியர்களாக இருக்கிறார்களே! அன்யோன்யமாகப் பேச ஒரு பந்து ஜனம் இல்லையே!

ஒரு நாள் காலை.

ஸ்ரீரங்கன் அந்த மாளிகைக்கு வந்து கீழ் அறையில் தங்கியிருந்தான்.

மேலே வரவில்லை. அவனுக்கு உடம்பு சரியில்லை. படுத்திருக்கிறான் என்று சொன்னார்கள்.

மதியம் ஆகும்போது கீழே பெரிய அரவங்கள் கேட்டன. சுவர்ணமுகி பலகணிப் பக்கம் எட்டிப் பார்த்தாள்.

ஐம்பது பேர் அடங்கிய சொந்தப் படையுடன் இரு பெண்மணிகள் வந்திருந்தார்கள். படையும், ஒரு பெண்மணியும் தூரத்தில் நிற்க,

ஒரு பெண்மணி மட்டும் குதிரையைச் செலுத்தி மாளிகை முகப்பில் வந்து நின்றாள்.

தூரத்தில் நிற்பவளைப் பார்த்ததும் கிருஷ்ணவேணி என்று தெரிந்தது. மற்றவள் யார்?

சுவர்ணமுகிக்குப் பயம் ஏற்பட்டது. இவர்கள் ஏன் இங்கே வந்திருக்கிறார்கள்? ஏதாவது ரகளை ஏற்படப் போகிறதா?

''ஸ்ரீரங்கா! ''என்று குரல்! சுவர்ணமுகி பலகணி வழியே மறைந்து பார்த்தாள்.

அந்தப் புதியவள்தான் வெளியில் இருந்தவாறு விளித்துக் கொண்டிருந்தாள்.

ஸ்ரீரங்கன் பெரிய போர்வை எடுத்து மூடிக் கொண்டு, வாசல் படியில் வெட வெடத்த வாறு நின்றான்.

பெண்மணிதன் குதிரையை விட்டு இறங்க வில்லை. அவளைப் பார்த்ததும் தனது தாய் பத்மலோசனி என்று ஸ்ரீரங்கனுக்குத் தெரிந்து விட்டது.

பத்மலோசனி தன் குதிரையை ஓட்டிக் கொண்டு வாசல் முகப்புக்குள் வந்தாள். படிகள் அருகில் நின்றாள்.

''ஸ்ரீரங்கா! நீ என் மகனா?'' என்றாள் கோபமுடன்.

''அம்மா!'' என்று தழுதழுத்தான் ஸ்ரீரங்கன். ''நான் என்றும் உன் மகன்தான்! இதில் என்ன சந்தேகம்?''என்றான் தாழ்மையோடு.

''இந்தக் காரியம் நீ செய்வாயா?'' என்றாள் பத்மலோசனி கோபத்துடன்.

''அம்மா! நான் ஏதும் தப்பிதம் செய்யவில்லை. தயவுசெய்து உள்ளே வாருங்கள் அம்மா!'' என்றான் அவன்.

''நீ நிற்கும் படியைக்கூட நான் மிதிக்க மாட்டேன். ஒரு தாய்க்கு நீ செய்யும் கைம்மாறு இதுதானா?'' என்றாள் கோபத்தோடு பத்மலோசனி.

அவளுக்கு நாற்பது வயதிருக்கும். இளமையாகத் தோன்றினாள். ராஜ களை முகத்தில் வீசியது.



# பிரதமர்

**பிரதமரின் சமீபத்திய மின்னல் வேக சென்னை விஜயம் பலருக்கு மர்மமாய் இருக்கிறது. ரகசியமான உண்மை நோக்கம் பற்றி பலவிதமான அபிப்பிராயங்கள்! இதற்கிடையில் 'பிரதமர் யார் பக்கம்?' என்று அதிமுக, திமுக தலைவர்களைக் கேட்டபோது:**

**திரு மோகனரங்கம்:**

மத்திய அரசுக்கும் மாநில அரசுக்குமிடையே நல்லுறவை வலுப்படுத்தவும் அன்யோன்யம் ஏற்படுத்தவும்தான் பாரதப் பிரதமர் திருமதி இந்திராகாந்தி சென்னைக்கு விஜயம் செய்தார். ''நான் சென்னைக்கு வருவது உங்களுடன் சேர்ந்து உங்களுக்கு உதவுவதற்கும் என்னால் முடிந்த அளவுக்கு உங்கள் செயலைப் பகிர்ந்து கொள்வதற்கும்தான்'' என்று தெளிவாகவே கூறியிருக்கிறாரே!

பிரமதர் இதே போல் மாநில வளர்ச்சியை ஆராய காஷ்மீர், பஞ்சாப், பீஹார் ஆகிய இடங்களுக்கும் சென்றிருக்கிறார். தமிழகம் வருவது ஒன்றும் அதிசயமல்ல.

தமிழ்நாடுதான் இந்தியாவிலேயே குடும்பக் கட்டுப்பாடுத் திட்டத்தைச் சிறப்பாக அமுல்படுத்திய மாநிலம். அதை இங்கு வந்திருந்த பிரதமர் பாராட்டியிருக்கிறார்.

நான் டெல்லியில் பிரதமர் அவர்களைச் சந்திக்கும்போதெல்லாம் என்னிடம் அவர் கேட்கும் முதல் கேள்வி ''உங்கள் முதல்வர் நலமாய் இருக்கிறாரா?'' என்பதுதான்.

பிரதமர் இந்திரா காந்தி நடந்த நிகழ்ச்சிகளை மறந்திருக்க மாட்டார். கஷ்டப்பட்ட காலத்தில் கைகொடுத்தவர், இந்திரா காங்கிரஸின் வெற்றிக்கு இங்கு உதவியவர் புரட்சித் தலைவர் என்பது அவருக்கு நன்கு தெரியும்.



தி.மு.க.வினர் எங்கள் கொள்கைகளை எதிர்க்காமல் எப்படியாவது எம். ஜி. ஆரைக் கவிழ்த்து விட வேண்டும் என்ற ஒரே நோக்கில் ஏன்தான் நடத்து கொள்கிறார்களோ! போதாக் குறைக்கு ஒருவர் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு தேதியை அறிவிக்கிறார். ஜூலை 16 என்றார் முதலில். பின் ஆகஸ்ட் 15 என்றார் இப்பொழுது செப்டம்பர் 18க்குச் சென்றிருக்கிறார். 1985ம் வருடம் வரை இவர்கள் இப்படிச் சொல்லிக் கொண்டேதான் இருக்கவேண்டும்.

மதுரையில் அவரின் உயிருக்கு உலை வைக்க முயன்றவர்கள் யார் என்பதை திருமதி இந்திரா மறக்கவில்லை. ஆக பிரதமர் சென்னை வந்தது எதிர்க் கட்சியினர் கிளப்பும் புரளியைப் போல் தமிழ்நாடு அரசின் குற்றங்களைச் சுட்டிக் காட்டவோ, அவர்களைப் பயமுறுத்தவோ அல்ல.

நான்கு மணி நேரத்தில் தமிழ் நாட்டைப் பற்றித் தெரிந்துகொள்ள முடியுமா என்ன என்று சிலர் சந்தேகிக்கலாம். நமது பிரதமர் பல்வேறு உலக விஷயங்களைத் தெரிந்து கொள்ளவும், முடிவெடுக்கவும் ஒரு மணி, ஒன்றரை மணிக்கு மேல் செலவிட்டதே கிடையாது. அவ்வளவு சிறந்த ராஜதந்திரி. அப்படிப்பட்டவருக்கு ஒரு மாநிலத்தைப் பற்றித் தெரிந்துகொள்ள நான்கு மணி நேரம் போதாதா? அவர் புள்ளி விவரங்களை வைத்துத்தான் இந்த விஜயத்தின் போது எல்லாவற்றையும் தெரிந்து கொண்டார்.

பிரதமர் எப்போதுமே உண்மையின் பக்கமும், உழைப்பின் பக்கமும் தான். ஆம், பிரதமர் இந்திரா காந்தி அ. தி. மு. க. வான எங்கள் பக்கம்தான் என்று கூறினார் தமிழக அரசின் டெல்லி பிரதிநிதியான மோகனரங்கம்.

---

''அம்மா! நிச்சயம் நான் தங்களுக்கு எந்தப் பாதகமும் செய்யவில்லையே!'' என்றான் ஸ்ரீரங்கன்.

''அந்தப் பெண்ணை அழைத்துக் கொண்டு நீ ஏன் இங்கே வந்தாய்?'' என்றாள் தாய்.

''அம்மா!'' என்று சொல்லித் தழுதழுத்தான் ஸ்ரீரங்கன். ''என்னைப் பொறுப்பீர்களா! தாங்கள் என்னை அனுப்பிய நோக்கத்தை என் மனம் ஒப்புக்கொள்ளவில்லை அம்மா!''

''என்ன காரணம்?''

''என்னவோ, பெரியப்பா வேங்கட ராஜாவுக்கு எதிராக நான் போக விரும்பவில்லை.''

''ஸ்ரீரங்கா! நீயா இதைச் சொல்கிறாய்?''

''ஆமாம், அம்மா! தப்பிதமானால் என்னை அவசியம் பொறுத்தருளுங்கள்!''

''அரசாளுவதற்கு உனக்கு இஷ்டமில்லையா?''

''அம்மா!'' என்று நிறுத்தினான் அவன். ''அரசாளுவதற்கு ஆட்கள் எத்தனையோ பேர் போட்டி போடுகிறார்கள். நானும் இந்தப் போட்டியில் இறங்கிக் குட்டையைக் குழப்ப விரும்பவில்லை.''

பத்மலோசனிக்கு சுவாசம் வீசி அடித்தது. பெரிய மார்புகளுடன் விம்மினாள்.

''ஸ்ரீரங்கா! உன் பெரியம்மா எனக்கு இழைத்த கொடுமைகளை யெல்லாம் மறந்து விட்டாயா?'' என்று சீறினாள் அவள்.

# யார் பக்கம்?

டாக்டர் கலாநிதி

பிரதமர் இந்திரா காந்தி சென்னை வந்ததே இந்த அரசு ஏதாவது செய்திருக்கிறதா என்று சரிபார்த்துப் போகத்தான். தலைவர் திரு கருணாநிதி கூறியதைப் போல் 'நிர்வாக இயந்திரமே இல்லாதபோது அது சுறுசுறுப்பாகச் செயல்படுகிறது என்று எப்படிச் சொல்லியிருக்க முடியும் பிரதமர்?' ஒன்றுமே நடக்காமல், நடக்க வழி செய்யாமல், நடக்க வைக்க முடியாமல் இருக்கும் ஓர் அரசைத் தட்டிக் கேட்கவே அவர் வந்திருக்கிறார் என்பது எல்லோருக்குமே தெரிந்த ஒன்று.

தமிழ்நாடு அரசுதான் குடும்பக் கட்டுப்பாடுத் திட்டத்தைச் சிறப்பாக அமல்படுத்தியது என்று இன்று கூறுபவர்கள் ஒன்றை மறந்துவிடக் கூடாது. கிராமப்புறங்களில் மருத்துவ வசதி நன்றாக இருக்கிறது என்று பிரதமர் சொன்னதாகச் சொன்னார்கள். கருணாநிதி அவர்கள் முதலமைச்சராக இருந்தபொழுது மக்கள் நல்வாழ்வுத் துறை அமைச்சராகப் பேராசிரியர் அன்பழகன் தீட்டிய திட்டங்கள்தாம் இன்றும் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன. அந்தப் பெருமையும் திராவிட முன்னேற்றக் கழகத்துக்குத்தான். இது பிரதமருக்கும் தெரியும்.

ஒரு பாராளுமன்ற ஆளும் கட்சி உறுப்பினரிடம் 'உங்கள் முதல்வர் நலமா' எனக் கேட்பது பிரதமரின் உயர்ந்த பண்பைக் காட்டுகிறது. இதனால் அ.தி.மு.க. விடம் அளவு கடந்த நட்பும் பாசமும் அவருக்கு ஏற்பட்டு விட்டதாகக் கருத முடியாது.'

பிரதமர் இந்திரா காந்தி நடந்த நிகழ்ச்சிகளை மறந்திருக்க மாட்டார்கள் உண்மை. இன்றைய அரசின் அமைச்சர்கள் உதாரணமாக காளிமுத்துவும் வேறு சிலரும் பேசியதை மறக்கவே மாட்டார்!

மாதமும் தேதியும் மாறி மாறி வருகின்றன என்று கூறுகிறார்களே, ஏன் அந்தத் தேதியையும் மாதத்தையும் கண்டு இவர்கள் பயப்படுகிறார்கள்?

குறைந்த நேரத்தில் பல விஷயங்களைத் தெரிந்துகொள்ளும் சிறந்த ராஜதந்திரி பிரதமர் என்பது எல்லோருக்கும் தெரியும். அவருக்கு இரண்டு மணி நேரமே தேவையில்லை, இரண்டு நிமிடங்களே போதும், இந்த ஆட்சியின் அவல நிலையைப் புரிந்துகொள்ள.

பிரதமர் எப்பொழுதுமே உண்மையின் பக்கமும் உழைப்பின் பக்கமும்தான். 1979ம் வருடம் சென்னை கடற்கரைப் பொதுக் கூட்டத்தில் தெள்ளத் தெளிவாக பிரதமரே தி.மு.க. தலைவர் கருணாநிதியைப் பற்றிக் கூறியிருக்கிறார்: 'கொள்கை ரீதியில் அவர் எங்களை எதிர்த்த பொழுதும் உறுதியாக இருந்தார். ஆதரிக்கும்போதும் அவர் உறுதியாகத்தான் இருக்கிறார்!'

சென்னை வந்து பார்த்த பிறகு பிரதமர் திருப்தி ஏற்பட்டதாகச் சொல்லவேயில்லை. ''நான் திருப்தி என்று சொல்ல மாட்டேன். ஏனென்றால் அப்படிச்சொன்னால் முன்னேற்றம் தடைப்படும்'' என்கிறார். பிரதமர் இதைவிட நாசூக்காக எப்படி இடித்துக் காட்ட முடியும்?



இதிலிருந்தே பாரதப் பிரதமர் எங்கள் பக்கம்தான் இருக்கிறார் என்பது புரிகிறது அல்லவா? என்று கேட்டார் தி.மு.க. நாடாளுமன்ற உறுப்பினர் டாக்டர் கலாநிதி.

பேட்டி: 'சலன்'

---

ஸ்ரீரங்கனுக்கு அது தெரியும். அரண்மனையுள் இருந்தவரை அவனது தாயாருக்கும், ராணியாருக்கும் ஒத்துப்போகவே யில்லை.

''மறக்கவில்லை அம்மா! ஆனால் ஒரு சொந்த விஷயத்துக்காக நான் இந்த நாட்டைப் பலி கொடுக்க விரும்பவில்லை.''

பத்மலோசனியின் கண்கள் உருண்டன.

''உன்னை யார் நாட்டைப் பலி கொடுக்கச் சொன்னார்கள்?'' என்றாள் சீற்றமாக.

''நீங்கள் சொல்லா விட்டாலும் பலன் அதுதான் ஏற்படும். நாட்டில் ஏற்கனவே பதினைந்து வருடங்களாக சிங்காதனப் போர் நடந்து விட்டது. மக்கள் சீரழிந்து விட்டார்கள். இத்துடன் பஞ்சம் வேறு. ஜன சமூகம் முழுவதும் ஒரு நரகத்தில் ஆழ்ந்து விட்டார்கள் அம்மா! இந்த நிலையில் நானும் சிங்காதனத்துக்குப் போட்டி விட்டு....''

''அப்படிச் செய்யா விட்டால் வேறு என்னதான் செய்யப் போகிறாய்?''

''வேங்கட ராஜாவுக்கு உதவி செய்யப் போகிறேன். அவர் மூலம் நாட்டில் அமைதியும் சுபிட்சமும் ஏற்படச் செய்யப் போகிறேன்.''

''இதுதான் உன் முடிவா?''

எரிந்து கேட்டாள் அவள்.

''முடிவு மட்டுமல்ல. உங்களையும் கேட்டுக் கொள்கிறேன். அம்மா. இம்மராஜா, நரசய்ய தளவாய், ரத்னவளி, தோதா இன்னும் எத்தனையோ சுயநலக்காரர்கள் இந்த நாட்

டின் உண்மை ராஜ வாரிசுக்கு எதிராகக் காரியங்கள் செய்து நாட்டைப் பாழ்படுத்தி வருகிறார்கள். நான் சொல்கிறேன் அம்மா! இந்த சுயநலக் கோஷ்டிகளில் தயவுசெய்து என்னையும் சேர்க்காதீர்கள்! உங்களுக்கும் ஒரு வேண்டுகோள்: பெரியம்மா உங்களைச் சரியாக நடத்தவில்லை என்று ஒரு சொந்தக் காரணத்துக்காக நீங்களும் பெரியப்பாவுக்கு (வேங்கட ராஜாவுக்கு) எதிராகப் போய் விடாதீர்கள்.''

''சீ! நிறுத்து உன் உபதேசத்தை! நீயும் ஒரு பிள்ளையா? உன்னைப் பார்த்தால்கூடப் பாவம்! நீ எக்கேடு கெட்டுப் போ! அந்தப் பெண் எங்கே? அவளை நான் அழைத்துப் போக வேண்டும்.''

குதிரையிலிருந்து கீழே குதித்தாள்.

ஸ்ரீரங்கன் பத்மலோசனியை ஏறிட்டுப் பார்த்தான். ''அம்மா!'' என்றான் உணர்ச்சிப் பெருக்கோடு. ''இதற்காகத்தான் நீங்கள் இங்கே வந்தீர்களா?'' என்றான் தாழ்ந்து கொண்டு.

''ஆமாம்!'' என்றாள் அவள். ''நீ எங்கே ஓடியிருக்கிறாய் என்று துப்புத் தேடிப் படையோடு வந்திருக்கிறேன். என் பிள்ளையின் போக்குத் தெரிந்து ஊர் சிரிக்க வேண்டாமா?'' என்று சீறினாள் அவள்.

''அம்மா! நான் அந்தப் பெண்ணைத் தருவதற்கில்லை. தயவுசெய்து நீங்கள் போகலாம்!''

''என்ன?'' என்றாள் பத்மலோசனி. ''ஒரு பெண்ணைத் திருடி வந்து விட்டு அவளைத் தரமாட்டாயா? இதோ படையை அழைக்கிறேன்.''

''அம்மா!'' என்று சற்று உரத்துக் கூறினான் அவன். ''உங்கள் படை அந்தப் பெண்ணைப் பிடிப்பதென்றால் என்னைக் கொன்றுவிட்டுத்தான் உள்ளே போக வேண்டும்.''

பத்மலோசனி முகத்தை நிமிர்த்தாள்.

''சூள் உரைக்கிறாயா?''

''இல்லையம்மா! என் பணிவான ஆசை அது! ஒரு தாயின் கட்டளையை நிறைவேற்றாத பிள்ளை அவள் முன்னாலேயே இறப்பது மேலில்லையா?''

---

தாய்: (மகளிடம்) நான் வாங்கிய புடவை மாதிரியே உனக்கும் வேண்டுமென்று பிடிவாதம் செய்து வாங்கினாயே, அதோ பார்! அது உன் புடவையென்று நினைத்துக்கொண்டு, என் புடவையைத் துவைக்கிறார் மாப்பிள்ளை!



---

பத்மலோசனி பொருட்படுத்தவில்லை.

தூரத்தில் இருந்த கிருஷ்ணவேணிக்குக் கையைக் காட்டினாள்.

அதைத் தொடர்ந்து அந்தக் காவல் படை முன்னால் நகர்ந்தது.

ஸ்ரீரங்கனுக்குக் கண்கள் கொதித்தன. ஜுர வேகத்திலும் அவன் தட்டுத் தடுமாறிப் படிகள் மீது ஏறினான். முன் அறைக்குள் புகுந்து ஒருவாளையும் கேடயத்தையும் எடுத்து வந்தான். பதற்றத்துடன் வாசல் துவாரத்தில் நின்று கொண்டான்.

படிகள் பக்கம் அந்தச் சிறு படைக் குழு நெருங்க, ''உம்ம்!'' என்றாள் பத்மலோசனி.

ஸ்ரீரங்கன் வாளைத் தூக்கினான்.

உச்சமான காய்ச்சல் அவனுக்கு. கண்கள் அனலில் வெந்தன. கைகள் நடுக்கமிட்டு ஆடின.

முதலில் இருவர் பாய்ந்து வந்தார்கள். ஸ்ரீரங்கன் முதல் திறன்களைக் காட்டினான். வான் இரு வான்களை எதிர்த்தது. அவனால் சரியாக நிற்க முடியவில்லை, சுவரில் சாய்ந்து கொண்டு சண்டையிட்டான்.

களைப்பும் சோர்வும் அவனைப் பொத்தி விட்டன.

கால் முகூர்த்தம் கூட அவனால் நிற்க முடியவில்லை.

கையில் பிடித்த வாளுடன் அவன் கீழே துரும்பு போல் உதிர்ந்தான்.

படையாட்கள் உள்ளே புகுந்தார்கள்.

இரைச்சலும் கெக்கலிப்பும் அவர்களோடு சென்றன.

உள்ளே மாளிகையில் எல்லாத் திசைகளிலும் படையாட்கள் பரவ, கிருஷ்ணவேணி இரு கைகளையும் இடுப்பில் வைத்துக்கொண்டு படிகளில் ஏறி நின்றாள்.

''வாங்க!'' என்று பத்மலோசனியை அழைத்தாள்.

பத்மலோசனி முகத்தில் ஆங்காரம் வெடிக்க, பும் என்று உதடுகளை வெளி நீட்டி ஒவ்வொரு படிகளிலும் கால்களை ஆக்கிரமிப்பாக வைத்து ஏறினாள்.

மேலே ஏறியதும் ஸ்ரீரங்கன் அங்கே விழுந்த ஆடை போல் கிடப்பதைப் பார்த்தாள்.

அவளது புத்திர பாசம் தலை அரும்ப, அதைத் தாண்டிக் கொண்டு வஞ்ச மனப்பான்மை மேலே எழுந்தது.

''ஹூம்!'' என்று அலட்சியமாக ஸ்ரீரங்கனைப் பார்த்து வாளாவிருந்தாள்.

கிருஷ்ணவேணி படிகள் ஏறி ஸ்ரீரங்கன் அருகில் போய் நின்று ''ஸ்ரீரங்கா!'' என்றாள்.

அவன் பேசவில்லை.

மெள்ள அவனைத் தொட்டு எழுப்பினாள். எழுந்திருக்கவில்லை.

அவள் நெஞ்சம் பதைத்தது.

''பத்மம்ம காரு! இப்படி வந்து பாருங்க!''

முதலில் அசட்டையாக இருந்த பத்மலோசனி மெல்ல நடந்து மேலே வந்தாள்.

ஸ்ரீரங்கன் இற்ற கயிறாக மடிந்து கிடப்பதைப் பார்த்ததும் அவள் கண்கள் மேலும் இறுக்கமாயின. இதயத்தின் மீது அவள் கை தானாகச் சென்றது. (தொடரும்)

**கா**லை டிபனை டிரைவ்-இன்னில் லதா சகிதமாக ஜமாய்த்துக் கொண்டிருந்தார் ரஜனி.

நுழைந்தேன்.

நிமிர்ந்தார். முடிக் கற்றையைச் செல்ல(?)மாக விலக்கினார். ''என்ன, எங்கு வந்தாய் சாப்பிடும் வேளையில் சிப்பன்ஸி புகுந்த மாதிரி?'' சிரித்தார்.

எல்லாமே புதுசுதான். பார்வை, அசைவு, பழமொழி, சிரிப்பு எல்லாம். ஸ்டைல் மன்னர் ஆயிற்றே!

லதாவை மார்பு நிமிரப் பார்த்தார். சாப்பிட்டார். அவர் சாப்பிட்டுக் கொண்டிருந்த பட்டாணி பாத்திலுள்ள பட்டாணியை விரல்களுக்கிடையே பந்தாடினார்!

அதை லாகவமாய்க் கண்டு விரலால் ஸ்நூக்கர் ஆடினார். பார்வையால் பில்லியர்ட்ஸ் ஆடினார்.

''ஸ்டைல் எக்ஸிபிஷன் போங்கள்'' என்றேன். மனுஷருக்குக் குஷி பிறந்தது.

மெல்ல ஆரம்பித்தேன். ''ஆமாம்... பத்திரிகையில் பார்த்தேன். நீங்களும் கமலும்....''

''...பாலாஜி வீட்டில் சண்டை போட்டோம் அதுதானே! கேட்க வந்துவிட்டாயா நீயும்! நீதான் பாக்கி என்று நினைத்தேன். வந்து தொலைந்தாயாக்கும்....''

''ஊஹூம், நான் ஒன்றும் அதைப் பற்றிக் கேட்க மாட்டேன். கேட்கவில்லை, நஹி நஹி! எதிராஜ் காலேஜ் பெண்கள் மீது சத்தியம்!''

லதாவின் கல்லூரிப் பெயரைக் கேட்டதும் சற்றுச் சமாதானமடைந்தார்.

நல்ல அஸ்திரம்தான் நான் போட்டது!

''பத்திரிகைகளுக்கு வேறு வேலை இல்லை கேட்கிறார்கள். எழுதுகிறார்கள். நீயுமா?''

''நானில்லை! நானில்லை.''

''பேனா எடுத்தவனெல்லாம் பத்திரிகைக்காரன்...''

''அதுதானே விவஸ்தையே இல்லாமற் போய்விட்டது!''

''என்ன நினைத்துக் கொண்டார்கள்? சண்டை என்ன புதிதோ? சில சமயங்களில் மனுஷனுக்கும் மனுஷனுக்கும் சண்டை வரத்தான் செய்யும்!''

''அதுதானே! கிராமத்துக்குக் கிராமம் சண்டை நடக்கிறதாம்!''

''ஊருக்கு ஊர் சண்டை நடக்கிறதாம்!''

''நாட்டுக்குநாடு சண்டை நடக்கிறதாம்!''

''தேசத்துக்குத் தேசம் சண்டை நடக்கிறதாம். இவர்கள் என்னடாவென்றால் இதைப் போய்ப் பெரிதுபடுத்துகிறார்கள்.''

''அதுதானே... எதைப் பெரிது படுத்துவதென்றே தெரியவில்லை. உங்களை எடுத்துக் கொள்ளுங்கள். ப்ரியா படத்தில் சீஸர் வேடத்துக்கு எடுக்க மறுத்த மீசையை, சற்றும் பெரிதுபடுத்தாமல் தில்லு முல்லுவுக்காக வெட்டித் தள்ளினீர்கள். இதற்கொரு சண்டை! இதெல்லாம் வெட்டித் தள்ள வேண்டிய விஷயம்தானே? இதுகூடத் தெரியவில்லை பத்திரிகைக்காரர்களுக்கு!''

''அப்படிச் சொல்லு! பாலசந்தருக்காக நான் எதுவும் செய்வேன். அவர் சவுக்கால் அடித்தாலும் சகித்துக் கொள்வேனாக்கும்... அவர் என் குரு!''

''கரெக்டாய்ச் சொன்னீர்கள்... ஆனால் ஒரு சின்ன விஷயம்!''

# ரஜினி ரட்சிப்பாராக!

பத்மஜா



''என்ன?''

''ஒரு க்யூரியாஸிட்டி. வேறொன்றுமில்லே. பத்திரிகைக்காரர்கள் கிடக்கிறார்கள். விட்டுத் தள்ளுங்கள். அடியேன் அறிவுஜீவி; விஷயப் பசி எடுக்கிறது. அதற்காகச் சில புள்ளி விவரங்கள்! அதிகம் வேண்டாம்... உங்கள் சண்டையின்போது என்னென்ன சண்டை போட்டீர்கள் — கராத்தேயா, குங் ஃபூவா, என்னென்ன பாஷையில் திட்டிக் கொண் டீர்கள் — தமிழிலா... ஆங்கிலத்திலா, என் னென்ன வார்த்தைகள் பயன்படுத்தினீர்கள் டிக்ஷனரியில் இருப்பவையா இல்லாத வையா... அவ்வளவுதான்! இதுக்கு மேல் நான் வாயே திறக்க மாட்டேன். மாட்டவே மாட்டேன்!''

இத்தனையும் கொட்டிவிட்டு நிமிர்ந்தேன். 'காளி'த்தனமான பார்வையை வீசினார் ரஜினி! 'நெற்றிக் கண்'ணைத் திறந்து பொசுக்க எத்தனித்தார்...

''என்ன நினைத்தாய் நீ? விளையாடுகிறாயா என்னிடம்?''

''வேண்டாம்... அந்த நெற்றிக் கண்ணை மூடுங்கள் மூடுங்கள்! பாலச்சந்தர் மேல் ஆணை... நான் எதுவும் கேட்க மாட்டேன்.''

சற்று நிதானித்தார். ''லதா பக்கத்தில் இருக்கிறாளே என்று விட்டு வைக்கிறேன். பிழைத்துப் போ....''

அப்பாடா தப்பித்தேன். லதா இருந்த பக்கமாய்த் திரும்பினேன். மினி கும்பிடு! முன் ஜென்மத்தில் தாய்க் குலத்துக்கு நான் செய்த சேவை (இந்த ஜன்மத்தில் ஸைட் அடித்ததைத் தவிர வேறு எதுவும் உருப் படியாய்ச் செய்ததாய் ஞாபகமில்லே) இப் போது என்னைக் காப்பாற்றி விட்டது.

சப்ஜெக்டை மாற்ற, ''ரஜினி சார், ஃபைட்டிங் சீனில் ஏதோ அடிபட்டதாமே உங்களுக்கு? கமல் சொல்லியிருக்கிறார். அதைப் பார்த்து ஒப்புக்கொள்ளுங்கள். கராத்தே காட்சிகளில்....'' என்றேன்.

உடனே ஆள்காட்டி விரலால் என்னைக் குறி பார்த்தார். ''ஒரு ஜோக் படித்தாயா நீ?! — ஒரு கராத்தே பயிற்சியாளர் என்ன சொல்லியிருக்கிறார் என்று! கமலுக்கு என்ன தெரியும் என்று கேட்டிருக்கிறார்... படிக்க மாட்டாயே அதையெல்லாம்!''

''படித்தேன்! படித்தேன்!''

''இதோ பார், ரஜினிக்குத் தெரியாது என்று கமல் சொல்வார். கமலுக்குத் தெரி யாது என்று ஒரு சுப்பன் சொல்லுவான். அந்தச் சுப்பனுக்குத் தெரியாது என்று ஒரு குப்பன் சொல்வான். யாருக்குத்தான் என்ன தெரியும்? ஆமாம்... கேட்க வந்துவிட்டாயே, உனக்கென்ன தெரியும்?''

''எனக்கா? இன்று சனிக்கிழமை என்பது தெரியும். இது டிரைவ்-இன் என்பது தெரியும். இன்று ப்ரெட் பீஸ் மசாலா ஸ்பெஷல் என்பது தெரியும். அதை நீங்கள் ஆர்டர் செய்வதானால், சர்வர் டிப்ஸையும் சேர்த்து பில்லுக்கு நீங்கள் என் சார்பில் கொடுப்ப தானால் அதை ஒரு கை பார்க்கத் தெரியும்.''

''அதுதானே பார்த்தேன்! விட்டுத்தள்ளு! ஆளை விடு!''

மளமளவென்று எழுந்து டைட் ட்ரெஸ் ஸிலும் சிவாஜி நடைக்கு, 'நான் போட்ட சவாலாய்' நடந்தார்; விரைந்தார்.

ஆமாம் ப்ரெட் பீஸ் என்ன ஆயிற்று? என்னை பீஸ் பீஸாக்காமல் விட்டு வைத்து விட்டுப் போகிறாரே —

அது போதாதா!?

---

# குருதேவரின் குரு

காஞ்சி காமகோடி பீடத்தை அலங் கரித்த 64-வது ஆசார்யாள் ஸ்ரீ பராபர குரு சுவாமிகள். (1814–1831) இவர் காஞ்சி யில் ஸ்ரீ காமாக்ஷி ஆலய ஜீர்ணோத்தாரண மும் கும்பாபிஷேகமும் செய்தவர். ஜம்பு கேசுவரத்தில் அகிலாண்டேசுவரிக்கு தாடங் கப் பிரதிஷ்டை செய்தவர். இந்த நற் பணிகளின்போது அவருக்கு ஏற்பட்ட சோத னைகள் பலப்பல. அந்தச் சோதனைகளை யெல்லாம் விடாமுயற்சியாலும் இறையரு ளாலும் வென்றார். கடைசியில் ஸித்தி அடை வதற்குச் சில காலம் முன்னதாக தஞ்சாவூர் முகாமை முடித்துக் கொண்டு புறப்படும் போது, அவரது தலை மறையும் அளவுக்கு லேசான தங்கத்தாலான பூக்களால் கனகா பிஷேகம் செய்துவைத்தார் தஞ்சை மகா ராஜா. இந்தக் கனகாபிஷேகத்தின் வரு வாய் நிரந்தர முதலீடாகி இன்றைக்கும் காஞ்சி மடத்துக்கும் அதன் நற்பணிகள் பல வற்றுக்கும் சந்திரமௌளீசுவர பூஜைக்கும் பயனாகி வருகிறது.



அறப் பணிகள் பலவற்றில் ஈடுபட் டிருந்த ஸ்ரீ பராபர குரு சுவாமிகளின் வாழ்க் கைச் சரிதம் சோதனைகள் மிக்கதானதாலேயே படிக்க மிகவும் சுவாரஸ்யமானதாகவும் அமைந்திருக்கிறது. இவரது வாழ்க்கை வர லாற்றை மிகவும் சுருக்கமாகவும் தக்க ஆதாரக் குறிப்புக்களோடும் புகைப்படங் களோடும் காஞ்சி முனிவர் பதிப்பிக்கச் செய்திருக்கிறார். சுமார் 40 பக்கங்களே கொண்ட சிறிய புத்தகம் தான் என்றாலும் இதற்கு ரூ. 51 கௌரவ விலையாக வைக்க வேண்டும் என்று பெரியவாள் அபிப்பிராயப் பட்டிருக்கிறார் — தக்ககாரணத்தோடுதான்.

ஸ்ரீ பராபர குரு ஸ்வாமிகளின் ஆராதனை யைப் பிரதி வருஷமும் அன்னாரது அவதார க்ஷேத்ரத்தில் நடத்தவும், அந்த வீட்டைப் பழுது பார்த்துப் புதுப்பிக்கவும் இந்தத் தொகை பயன்படும்.

பக்தர்களுக்கு முகவரி:
ஏ.ஆர். சேஷய்யா சாஸ்திரி
மானேஜிங் டிரஸ்டி
வடகோடி பிருந்தாவனம் டிரஸ்ட்
49, கல்யாணராமன் தெரு,
கும்பகோணம்-612 001.




ஊழல் சாம்ராஜ்யம் நடத்திய 'அண்டுலேயின் அட்டகாசங்களை அழகுற அக்கு வேறு ஆணி வேறாகப் புரியவைத்த ஒரே சஞ்சிகை 'கல்கி' ஒன்றுதான்.

முசிறி — இராம மதுக்கண்ணன்

காந்தி சமாதியில் மலர்வளையம் சாத்துவதுமட்டுமல்ல, காந்தி உயிரோடு இருந்தால் அவர் காதிலும் பூ சுற்றும் திறமைசாலிகள் நம் அரசியல் தலைவர்கள்.

விழுப்புரம் — கே. எஸ். குமார்

பிரும்மோபதேசம் கதையில் குப்பண்ணு கண்ணனுக்குச் செய்யும் உபதேசம் சபாஷ்! சமுதாய சலுகையை துஷ்பிரயோகம் செய்பவருக்கு நல்ல ஒரு சூடு. மனநிறைவு தந்த சிறுகதை.

உடுமலைப்பேட்டை — செம்பகா அருணாசலம்

''கடவுள் வேங்கடேசன், கிளார்க் வேங்கடேசன் மூலம் பணத்தை வசூல் செய்த விதம் ''சாமி பணத்தில்'' நன்றாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது!''

கும்பகோணம் — கை. இராம மதி

1வது கதை 'விமலா ரமணி'யின் 'பிரும்மோபதேசம்' நான்கு பக்கங்களிலும்,
2வது கதை 'அக்ஷயன்' எழுதிய நடுவே ஓர் உலகம்' மூன்று பக்கங்களிலும்,
3வது கதை 'வி. பார்த்திபன்' எழுதிய 'சாமி பணம்' இரண்டு பக்கங்களிலும்,
4வது கதை 'எஸ். குமார்' எழுதிய 'துரோகம்... துரோகம்' ஒரு பக்கத்திலும் வெளியாகியிருக்கிறதே!

விருத்தாசலம் — எஸ். இம்மி

நடுப் பக்க போட்டோ கார்ட்டூன்கள் பிரமாதம். இன்றைய இந்திய சமுதாயத்தில் நிலவும் அவலங்களைத் தெளிவாக, சிந்தனைக்குரிய முறையில் சிறப்பாக வெளியிட்டிருக்கிறீர்கள்.

பட்டுக்கோட்டை — வே. ரெத்தினகுமார்

சிவப்பு மல்லி விமர்சனத்தில் காணப்படாத ஒரு தவறை மிகப் பெரிதுபடுத்தி விமர்சகர்களையும் ''நேற்று வந்த சிந்து ஸ்ரீவாக்களும், நளினி சாஸ்திரிகளும்'' போன்ற கண்ணியக் குறைவான வரிகளால் தாக்கும் ஒரு வயதானவரின் கடிதத்தைப் பிரசுரித்த உங்களுக்கு இளைஞர்கள் சார்பில் என்ன தண்டனை கொடுக்கலாம்?

குறிச்சி — பி. கோவிந்தராஜ்

ஓய், நளினி சாஸ்திரி! ஆனாலும் உமக்கு இத்தனை ஓரவஞ்சனை கூடாதுங்காணும்! 'கமல்' படத்தை மட்டும் ஜாலியாக பால்கனியில் உட்கார்ந்து பார்த்துவிட்டு குஷியோடு பைசாவைப் பிரித்திருக்கிறீர். ஆனால் எங்க கே.எஸ்.ஜி.யின் படத்தை மட்டும் தரை டிக்கெட்டில் பார்த்துவிட்டு, அதே எரிச்சலுடன் விமர்சனம் எழுதி இருக்கிறீர். போங்காணும், நீரும் உமது விமர்சனமும்!

பெருங்களத்தூர் — எல். ரவிசர்மா

இனி கல்கி இதழை வாரந்தோறும் ஒரு பிரதி குறைவாகவே அச்சடியுங்கள். ஏனெனில் இனி நான் கல்கியை வாங்கப்போவதில்லை. பின்னே என்ன ஸார்? ஏப்ரல் மாதத்திலிருந்து வட்டமேஜைக்கு 31 கார்டுகள், கடுகு பதில்களுக்கு 12 கார்டுகள், நகைச் சுவைத் துணுக்குகளுக்கு 10 முப்பத்தைந்து பைசா கவர்கள், ஸ்வீட் செவன்டீன் பகுதிக்கு 2 இன்லெண்ட் லெட்டர்கள் ஆக ரூ 10.45 செலவழித்துள்ளேன். ஒன்றாவது வரவேண்டுமே? மூச். போஸ்ட் ஆபீஸ் எனது மாமியார் வீடு என்று நினைத்துவிட்டீர் போலிருக்கிறது. இந்தக் கடிதத்துடன் கல்கிக்கு ஒரு சலாம்!

சென்னை-44 — ஏ. கே. சங்கர்

வித்வானின் கட்டுரை சங்கிலித் தொடராகும் போலிருக்கிறதே! அந்தப் பொன் மனத்தைத்தான் எவ்வளவு தூரம் உரசிப் பார்த்திருக்கிறார் பாலஜோதிடர்!

சென்னை-39 — திருமதி நாராயண ராவ்
திருமதி மஞ்சுளா பாய்

பொன்மனச் செம்மலும் பொன்விழா ஆண்டும் என்ற கட்டுரை மிகவும் சுவையாகவும் படிக்கப் படிக்க உற்சாகமாகவும் இருக்கிறது. கட்டுரையைச் சீக்கிரம் முடித்துவிட வேண்டாம்.

திருச்சி-14 — எம்.கே. ரங்காச்சாரி

''பொன்மனச் செம்மலும் பொன்விழா ஆண்டும்'' தொடர்கட்டுரையில் வித்வான் லட்சுமணன் 'கணவன்' படத்தில் புரட்சி நடிகரோடு லட்சுமி கதாநாயகியாக நடித்துள்ளார் என்று கூறியுள்ளார். அப்படத்தில் லட்சுமி நடிக்கவில்லை. மக்கள்திலகத்தோடு லட்சுமி கதாநாயகியாக நடித்தது ''சங்கே முழங்கு'' படத்தில்தான்.

சுந்தரபாண்டியபுரம், — எஸ். சுப்பிரமணியன்



# பாரதியாரின் பாஞ்சாலி சபதம்

ம.பொ.சி

“எனது சித்திரம் வியாச பாரதத்தைத் தழுவியது'' என்கிறார் பாரதியார். ஆனால், வியாச பாரதத்திலே துரியோதனன் அவையில் பாஞ்சாலி சபிக்கிறாளே யொழிய சபதம் எதுவும் செய்யவில்லை.

எட்டயபுரம் கவிஞர் தாம் படைத்த குறுங் காப்பியத்துக்குப் பெயர் தருவதிலே தமக்கு முன்னே வியாச பாரதத்துக்குத் தமிழில் வழி நூல் படைத்த வில்லிபுத்தூராரையே பின்பற்றியிருக்கிறார். வியாச பாரதத்திலே பாஞ்சாலி சபிக்கிறாள் அல்லவா? அந்தச் சாபத்தைத் தமது வழி நூலில் வில்லிபுத்தூரார் பதிவு செய்கிறார்.

இதற்கு மேலே சென்று பாஞ்சாலி சபதம் செய்ததாகவும் ஒரு செய்யுளிலே கூறுகிறார். அதைப் பார்ப்போம்:

''அரசவையில் எனையேற்றி அஞ்சாமல்
துகில் தீண்டி அளகம் தீண்டி
விரைசெயவி இனம்படித்தார்
வேந்தரெதிர் தகாதனவே விளம்புவோரைப்
பொருசமரில் முடிதுணித்துப் புலால் நாறும்
வெங்குருதி பொழிய வெற்றி
முரசறையும்பொழுதல்லால்
விரித்த குழல் இனியெடுத்து முடியேன்...''

இதுதான் பாஞ்சாலி செய்கின்ற சபதம். இந்தச் சபதம் போதாதென்று தோன்றுகிறது புரட்சிக் கவி பாரதிக்கு!

''தேவி திரௌபதி சொல்லுவாள் — 'ஓம்
தேவி பராசக்தி ஆணையுரைத்தேன்;
பாவிதுச் சாதனன் செந்நீர் — அந்தப்
பாழ்த்துரி யோதனன் ஆக்கை யிரத்தம்
மேவியிரண்டுங் கலந்து — குழல்
மீதினிற் பூசி நறுநெய் குளித்தே
சீவிக்குழல்முடிப் பேன்யான் — இது
செய்யுமுன்னே முடியேன்.''

வில்லியிலே 'கௌரவரான பாவியர்கள் போரில் கொல்லப்படும்போதுதான் என் கூந்தலை யான் முடிப்பேன். அதுவரை முடிக்க மாட்டேன்' என்றுதான் பாஞ்சாலி சபதம் செய்கிறாள்.

பாரதி கண்ட பாஞ்சாலி 'துச்சாதனனுடைய செந்நீரையும், துரியோதனனுடைய இரத்தத்தையும் ஒன்றாகக் கலந்து, அதனை எண்ணெயாகத் தன் கூந்தலில் தடவி விரித்த கூந்தலை எடுத்து முடிப்பேன். அதுவரை முடியேன்!' என்று சபதம் செய்கிறாள்.

வடமொழி சாத்திரத்திலே, ஒரு மன்னன் இன்னொரு மன்னனைச் சூதாட அழைத்தால் அந்த அழைப்பை மறுக்காமல் ஏற்கவேண்டுமாம். மறுப்பது இழுக்காம். இப்படிச் சாத்திரம் சொல்லுவதால்தான் தருமன் மனமின்றிச் சூதாடத் துணிந்தான் என்கிறார் பாரதியார். இதைச் சொல்லிவிட்டு சாத்திரத்தைத் திட்டுகிறார். இதோ, சினங் கொண்டு பாடுகின்றான் பாரதி, கேட்போம்:

''வெய்யதான விதியை நினைந்தான்
விலக்கொணாதற மென்ப துணர்ந்தோன்
பொய்ய தாகுஞ் சிறுவழக் கொன்றைப்
புலனி லாதவர் தம்முடம்பாட்டை
ஐய, நெஞ்சில் அறமெனக் கொண்டான்
ஐயகோ! அந்தநாள் முதலாகத்
துய்ய சிந்தைய ரெத்தனை மக்கள்
துன்ப மில்வகை எய்தின ரம்மா!''

இந்தச் செய்யுளிலே சாத்திரஞ் சொல்லும் பழைய பொய்மை ஒன்றுக்குத் தருமன் ஆட்படவேண்டி நேர்ந்ததை நினைத்து ஐயன் பாரதி நெஞ்சம் நைகின்றான். இதற்குமேல் இப்படியொரு சாத்திரம் வகுத்தவர்களையும் சாடுகிறான், பகுத்தறிவுக் கவி ஞன்பாரதி!

முன்பி ருந்த தொர் காரணத்தாலே
மூடரே, பொய்யை மெய்யென லாமோ?
முன்பெனச் சொலும் காலம் அதற்கு,
மூடரே, ஓர் வரையறை யுண்டோ?....
நீர்பி றக்குமுன் பார்மிசை மூடர்
நேர்ந்த தில்லையென நினைந்தீரோ?....
பொய்யொ ழுக்கை அறமென்று கொண்டும்
பொய்யர் கேலியைச் சாத்திரம் என்றும்
ஐயகோ, நங்கள் பாரத நாட்டில்
அறிவிலா ரறப் பற்றுமிக் குள்ளோர்
நொய்ய ராகி அழிந்தவர் கோடி
நல்ல கைபல தேர்ந்து தெளிந்தோன்
மெய்ய நிந்தவர் தம்முள் உயர்ந்தோன்
விதியி னலத் தருமனும் வீழ்ந்தான்!''

(மயிலை இலக்கிய வட்டம் பாரதீய வித்யாபவனச் சொற்பொழிவிலிருந்து)

---

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone : 431543) Editor : K. Rajendran


AVM
SOVEREIGN MARK
AVM
SOVEREIGN MARK
COCOANUT OIL
AVM Sovereign Mark
COCOANUT OIL